# கழுமலப் போர்

புலவர்

**கா. கோவிந்தன்,** எம். ஏ.,

சபாநாயகர்

தமிழ்நாடு சட்டப்பேரவை

**நாதன் பதிப்பகம்**

19. 2வது மெயின் ரோடு. சி.ஐ.டி.நகர்

சென்னை-35

முதற் பதிப்பு: செப்டம்பர் 1958
புதிய பதிப்பு: ஜனவரி 1975


---

விலை ரூபாய் மூன்று

---

அச்சிட்டோர்:
முவேந்தர் அச்சகம், சென்னை-14.

# பதிப்புரை

'கழுமலப் போர்' என்னும் இந்நூல், சேரமான் கணைக்கால் இரும்பொறைக்கும் கோச் செங்கட் சோழனுக்கும் கழுமலம் என்னும் ஊரின்கண் நடந்த போரை விளக்க முறக் கூறுவதாகும். தமிழில் வரலாற்று நூல்கள் இல்லை யென்னும் குறையினை இத்தகைய நூல்களே போக்க வல்லனவாகும். இந்நூல் சிறந்த வரலாற்று நூலாகவும், உரைநடை இலக்கிய நூலாகவும், ஆராய்ச்சி நூலாக வும் திகழ்கின்றது.

இத்தகைய வரலாற்று நூலை எழுதுவதற்கு எத்துணைச் சங்க இலக்கியப் பயிற்சி இருக்கவேண்டும் என்பதனை இந்நூலைப் பயின்றோர் நன்கறிவர். கடல் போன்ற பரப்பும் சிறப்பும் அமைந்த சங்க இலக்கியங்களிலிருந்து, கழுமலப் போருக்குரிய குறிப்புக்களைத் தேர்ந்தெடுப்பதென்பது, ஆழ்ந்தகன்ற கடலுள் மூழ்கி அரிய முத்துக்களை ஆய்ந்தெடுக்கும் அருஞ்செயலை ஒப்பதேயாகும்.

இதுபோன்ற நூல்கள் மேலும் பல வெளி வர அன்பர்களும் ஆசிரியப் பெருமக்களும் இந்நூலை ஆதரிப்பதன் மூலம் எம்மை, மேலும் இத்துறையில் ஊக்குவார்கள் என நம்புகிறோம்.

பதிப்பகத்தார்.

# பொருளடக்கம்

# குமரிப் போர்

## 1. போரின் பொதுவியல்பு

உலக வாழ்வில், போர் ஓர் இன்றியமையா நிகழ்ச்சியாக உருவெடுத்து விட்டது. உள்ளத்தில் இயல்பாக ஊறி எழும் பல்வேறு உயிர்க் குணங்களுள் போர் உணர்வும் ஒன்று. உடல் வளர்ச்சிக்கு இன்றியமையா உணவுப்பொருள்களை உளவாக்கி உயிர்களுக்கு வாழ்வளிப்பது நிலம். அந்நிலவுலகின் இயல்பு எங்கும் ஒரே தன்மைத்தாக அமையவில்லை. இயற்கை வளம் மிக்க காடாய்க் காட்சி அளிக்கிறது ஒரு பால். நீர்வளம் மிக்க நன்செய்யாய் நலம் பெற்றுளது ஒரு பகுதி. ஒரு பகுதி மலைவளம் மிக்க மேடாய் மாண்புற்றுளது. ஒரு பகுதி கடல் வளம் கொழித்துக் கவின்பெறக் காண்கிறோம். அம்மட்டோ! ஒரு பகுதி, ஒன்றிற்கும் உதவா உவர் நிலமாய் உளது. மற்றொரு பகுதி மணல் பரந்து மாட்சி இழந்துளது. இயற்கை நிகழ்ச்சியாலாம் இவ்வேற்றத் தாழ்வுகள், நிலவள வோடு நின்றுவிடவில்லை. அவை அந்நிலத்தில் வாழும் மக்கள் வாழ்விலும் இடம் பெற்றுப் பெரும் புரட்சிகளை உருவாக்கி யுள்ளன. நிலங்களின் ஏற்றத் தாழ்வுகளுக்கு ஏற்ப, அந் நிலத்து மக்கள் வாழ்விலும் ஏற்றத் தாழ்வுகள் இடம் பெற்று விட்டன.

நன்செய் போலும் நிறைபயன் நல்கும் நிலப்பகுதிகளில் வாழும் வாய்ப்பினைப் பெற்றவர், ‘பேரின்பப் பெருவாழ்வு

பெற்று மகிழ்ந்தனர். வன்னிலம் போலும் வளம் நல்கா நிலப் பகுதிகளில் வாழ்ந்தவர், வறுமையுற்று, வாழ்வின் வளம் பெறமாட்டாது வருந்தினர். வாழ்வும் வறுமையும், இவ்வாறு வாழும் நிலத்தின் வளம், வளமின்மைகளின் விளைவாகவே உண்டாயின. எனினும், அதை உணர்ந்து உள்ளம் அடங்கும் அத்துணை உயர்ந்த பண்பு மக்களுக்கு உண்டாகவில்லை. வளமார் வாழ்வில் விடப்பெற்றவர், அவ்வாழ்வு தம் முயற்சியினுலேயே வந்தது என எண்ணித் தருக்கினர்; தாழ் நிலையில் உள்ளாரைக் கண்டு எள்ளி நகைத்தனர். இல்லாமையால், இயல்பாகவே இடர் உறுவார்க்கு மேலும் இடுக்கண் பல உண்டாக்கினர். இந்நிலைக்கு மாருக, வறுமையில் உழன்று, வாழ்வின் பயன் இழந்து கிடந்த மக்கள், வளங் கொழிக்கும் நிலத்தாரின் செல்வ வாழ்வைக் காணுந்தோறும் சிந்தை நொந்தனர். அத்தகு பெருவாழ்வு தமக்கும் வேண்டும் என ஆசை கொண்டது அவர் உள்ளம். அவ்வாசையை நிறைவேற்றிக் கொள்ள, அவர் எதற்கும் துணிந்து நின்றனர். ஆனல், அவ்வின்ப வாழ்வை அவர்க்கு அளிக்க மேனிலையில் வாழ்வார் முன்வந்திலர். அதனுல் இருதிறத்தார்க்குமிடையே மன வேறுபாடு வளர்ந்தது. அது வளர்ந்து பகையாக மாறிற்று. இறுதியில் அது அவர்க்கிடையே போராய் உருவெடுத்தது.

இவ்வாறு உருவெடுத்த போரை, அப்போர்க்காம் காரணம் கருதி நான்கு வகையாகப் பகுத்து விளக்கியுள்ளார், தமிழ் மக்களின் தலையாய ஒழுக்கங்களை வரையறுத்து விளக்கிய ஆசிரியர் தொல்காப்பியனூர். அவை[1] வெட்சி, வஞ்சி, உழிஞை, தும்பை.

நிலம், ஆங்காங்குப் பெற்றிருக்கும் இயற்கை நிலைகளுக்கேற்ப, குறிஞ்சி, முல்லை, பாலை, மருதம், நெய்தல் என ஐந்து வகையாகப் பிரிக்கப் பெறும். மலையும் மலைசார்ந்த இடமும் குறிஞ்சி. காடும் காடு சார்ந்த நிலமும் முல்லை, மலையென்றே காடு என்றே துணிந்து கூறமாட்டாது சிறு மலையும், குறுங்

காடும் கலந்து தோன்றும் பகுதி பாலை. வயலும் வயல் சார்ந்த நிலமும் மருதம். கடலும் கடல் சார்ந்த நிலமும் நெய்தல். நிலப் பகுதி, இவ்வாறு ஐவ்வகையாகப் பகுக்கப் பெறும் எனினும், அவற்றுள் குறிஞ்சி நிலமே முதற்கண் தோன்றிய நிலமாம். "கல் தோன்றி மண் தோன்றாக் காலம்" எனப் பழந் தமிழ் நூல் ஒன்று பகர்வதும் காண்க.

நிலங்களுள், குறிஞ்சி நிலமே முதற்கண் தோன்றிய நில மாதலைப் போன்றே, 'மக்கள் முதன் முதலில், தங்கள் வாழ்க் கையைத் தொடங்கிய இடமும் அம்மலைநாடே ஆம். மக்கள், தங்கள் வாழ்க்கையினை ஆண்டே தொடங்கியதற்கு, அது முதற்கண் தோன்றியது என்பதினும், அம்மக்களுக்குத் தேவையாம் உணவுப் பொருள்கள் அனைத்தையும், அவர் உழைப்பை எதிர் நோக்காமலே அளித்தது அந்நிலம் என்பதே பொருந்தும் காரணமாம். முயற்சியின்றியே பெறலாகும் காயும், கனியும், கிழங்கும் அந்நிலத்தில் நிறையக்கிடைத்தன. உண்ணு நீர்ச்சுனைகளும் ஆங்கேயிருந்தன. காயும், கனியும், கிழங்கும் அருகிய காலத்தில், ஆண்டுவாழ் மக்களுக்கு உண வாகிப் பயனளிக்கும் உயிரினங்களும் ஆங்கே வாழ்ந்திருந்தன.

தமக்கு வேண்டும் உணவுப் பொருள்கள், இவ்வாறு தம் முயற்சி ஒரு சிறிதும் தேவைப்படாமலே, எங்கும், எப்பொழு தும், கிடைத்தமையால், நாளைக்கு வேண்டும் என ஈட்டி வைக்க வேண்டிய இன்றியமையாமை, அக்குறிஞ்சி நில மக்க ளுக்கு உண்டாகவில்லை. ஆனால், அந்நிலை நெடிது நாள் நிற்க வில்லை. நாள் ஆக ஆக, மக்கள்தொகை பெருகிக்கொண்டே வந்தது. ஆனால், அம்மக்கள் வளர்ச்சிக்கேற்ப, உணவுப் பொருள்கள் பெருகவில்லை. மக்கள் தொகை நாள்தோறும் பெருகிக் கொண்டே யிருந்தமையாலும், மக்கட் பெருக் கத்திற்கேற்ப, உணவுப் பொருள்கள் பெருகாமையோடு, மக்கள் அவற்றைத் தொடர்ந்து தின்றுகொண்டே வந்தமை யால், அவை சிறுகச் சிறுக அற்றுக்கொண்டே வந்தமை யாலும் மக்களுக்கு உணவுக் குறைபாடு உண்டாயிற்று.

அதனால் அம்மக்களுள் ஒரு சிலர், தாம் வாழ்ந்த அக்குறிஞ்சி நிலத்தின் நீங்கி, அந்நிலத்தைச் சேர்ந்துள்ள பாலையுள் சென்று தங்கினர். பாலை, குறிஞ்சி போல் வளம் நிறைந்தது அன்று. ஆகவே, ஆண்டுச் சென்றவர், ஆண்டே வாழ்தல் இயலாது போயிற்று; அப்பாலையையும் கைவிட்டு, அதை அடுத்துள்ள முல்லை நிலத்தில் வாழிடம் தேடினர்.

முல்லை, பாலைபோல் வளமற்ற வன்னிலமாகாது, வாழ்வதற்கு ஓரளவு வாய்ப்பளிக்கும் நிலமாக விளங்குவது கண்ட அம்மக்கள், அந்நிலத்தில் நிலையாக வாழத் தலைப்பட்டனர். காடுகளை அழித்துப் பயிரிடவும் பழகினர். விலங்குகளோடு வாழ்ந்து பழகிய பழக்கத்தின் விளைவால், அவ்விலங்குகளுள் ஆடு, மாடு, எருமை போன்றன உடன் வைத்துப் பேணத் தக்கன; பெரும்பயன் தருவன என உணர்ந்தனர். அதனால் அவற்றைப் பெருமளவில் வைத்துப் போற்றினர். அவற்றையே, அவர், தம் செல்வமாகக் கருதினர். அவர் செல்வ வாழ்வை அளந்து காணும் அளவுகோலாக அவை கொள்ளப் பட்டன. அவற்றை நிறையக் கொண்டார் செல்வ வாழ்வின ராவர் எனவும், குறையக் கொண்டார் வறுமையால் வாடுவோர் எனவும் மதிக்கப் பெற்றனர். இவ்வாறு ஆனிரைகளைப் பேணிப் பெருக்கி வாழ்ந்தமையால், முல்லை நிலம்புக்க மக்கள் வாழ்வு ஓரளவு அமைதியுடையதாயிற்று. நிற்க.

வாழ்க்கையைக் குறிஞ்சி நிலத்தில் தொடங்கிய மக்கள் அனைவருமே முல்லையுள் குடிபுகுந்து விட்டாரல்லர். ஒரு சிலர் அக்குறிஞ்சியிலேயே தங்கிவிட்டனர். ஒருசிலர் இடைவழியில் உள்ள பாலை நில வாழ்க்கையிலேயே பழகிவிட்டனர். ஆனால், பாலை, குறிஞ்சி நிலத்தின் மலைவளமோ, முல்லை நிலத்தின் காட்டுச் செல்வமோ வாய்க்கப் பெறாத வன்னிலமாதலின், ஆண்டுத் தங்கியவர்கள், வாழ்க்கைக்காம் வழிகாணாது வருந்தினர். வயிற்றுப் பசி, அவர்கள் உள்ளத்தில் வற்றாச் சினத் தீயை மூட்டிற்று. பழிபாவங்களை அவர்கள் எண்ணிப் பாரா

ராயினர். பாலைநிலத்தைக் கடந்து வருவார் போவார் கொண்டு செல்லும் பொருள்களைக் கொள்ளையடித்துண்ணும் கொடியரராயினர். பாலையில் ஆறலைத்து வாழும் வாழ்வின ராய் மாறிய அம்மறவர், தமக்கு வேண்டும் பொருளை அவ் வழியில் பெற இயலாக் காலத்தில், பாலையை அடுத்துள்ள நிலங்களுட் புகுந்து கொள்ளையிட்டு மீளும் வாழ்க்கையினை மேற்கொண்டனர். பாலையை அடுத்து ஒரு பால் குறிஞ்சியும், ஒரு பால் முல்லையும் உளவெனினும், குறிஞ்சி, ஆண்டு வாழ் வார்க்கு வேண்டும் பொருள்களைத் தருவதே அரிது; ஆகவே ஆண்டு உறைவார் ஈட்டி வைக்கும் பொருள் எதுவும் இராது என்பதை அக்குறிஞ்சியில் ஒருகாலத்தில் இருந்து வாழ்ந்தமை யால், அம்மறவர் அறிந்திருந்தனர். அதனால் அவர்கள் தமக் குப் பொருட் குறைபாடு உண்டான காலத்தில், குறிஞ்சி நிலக் குறவர்பால் செல்லக் கருதவில்லை. முல்லை நிலத்து ஆயர்கள், ஆடு மாடுகளைப் பழக்கி, ஒன்று பலவாகப் பெருக் கிப் பயன் கொண்டு வாழ்கின்றனர் என்பதை அறிந்து, அம் மறவர் தமக்கு உணவுக் குறை உண்டாந்தோறும் முல்லை நிலம் புகுந்து, ஆயர்களின் ஆனிரைகளைக் களவாடி வருதலை வழக்கமாகக் கொண்டனர்.

காட்டில் மேய்ந்துகொண்டிருந்த தம் ஆனிரைகளைப் பாலை நிலத்து மறவர் கவர்ந்து செல்கின்றனர் எனக் கேட்ட முல்லை நிலத்து ஆயர், செய்யும் தொழிலையும் மறந்து, காடு நோக்கி விரைந்து ஓடுவர். மறவர் கவர்ந்து செல்லும் ஆனிரை, அவர்க்குரிய பாலை நிலத்து ஊர்களை அடைந்துவிடு மாயின், அவை அவர்க்குள்ளாகவே பகுத்துக் கொள்ளப்படு மாதலாலும், அம் மறவர்க்கு அவர் ஊர்க்கண் ஆற்றல் மிகுந்துவிடுமாதலாலும், அவர்கள் ஆனிரைகளோடு காட் டைக் கடவா முன்பே சென்று, ஆயர்கள் அவர்களை மடக்கிப் போரிட்டு வென்று துரத்திவிட்டுத் தம் ஆனிரைகளை மீட்டுக் கொணர்வர். இவ்வாறு பாலைநிலத்து மறவர் கவர்ந்து சென்ற தம் ஆனிரைகளை மீட்டுக்கொணர ஆயர் அம் மறவ ரோடு செய்யும் போரே வெட்சிப் போராம். ஆனிரைகளைக்

கவர்தலும், மீட்டலும் குறித்து நிகழ்ந்த போர்கள் பல தமிழ் நூல்களில் கூறப்பெற்றுள்ளன. *நிற்க.

பாலை நிலத்து மறவர் களவாட, முல்லை நிலத்து ஆயர் மீட்டுவரும் இம்முறை, காலம் செல்லச் செல்லச் சிறிது மாறுதலுற்றது. ஆனிரைகளுக்கு அண்டை நிலத்தவரால் அவ்வப்போது இடையூறு உண்டாவதைக் கண்ட ஆயர், தம் பொருளையும் தம்மையும் காக்கவல்ல தலைவன் ஒருவன் தேவை என உணர்ந்தனர். தம்முள்ளே தக்கான் ஒருவனைத் தேர்ந்து தலைவனாக்கினர். கோவினத்தைக் காக்கும் கடமை மேற்கொண்டு கோன் எனப் பண்டு அழைக்கப் பெற்றவனே, பிற்காலத்தில் அரசன் என அழைக்கப் பெற்றான். நிற்கஆனிரைக்குரியவர், தமக்குள்ளே அரசனைத் தேர்ந்து கொண்டமை கண்ட மறவரும் தமக்குள்ளே ஒரு தலைவனைத் தேர்ந்து அரசனாக்கினர். இந்நிலை உண்டான பின்னர்ப் போர் முறையில் புதுமைகள் இடம் பெற்றன. பகைவர், தம் ஆனிரைகளைக் கவர்ந்து செல்கின்றனர் என்ற செய்தி கேட்டும், ஆயர், பண்டேபோல் தாமே சென்று மீட்டு வருதலைக் கைவிட்டுக், காவலன்பால் சென்று நிகழ்ந்தது கூறுவர். அரசன், தன் நாற்படையோடு சென்று, அப்பகைவரை வென்று ஆயர்களின் ஆனிரைகளை மீட்டுத் தருவன். ஆடு கோட்பாட்டுச் சேரலாதன் என்ற சேர வேந்தன் ஒருவன், தன்னாட்டு ஆயர்க்குரிய ஆடுகளைத் தண்டகாரணியத்தில் வாழ்வார் சிலர் வந்து கவர்ந்து சென்றார் எனக் கேட்டுப் படையோடு சென்று அவ்வாடுகளை மீட்டுக் கொணர்ந்து உரியவர்பால் ஒப்படைத்தான்; அவனாற்றிய செயலின் அருமை அறிந்து, அக்கால மக்கள், அவ்வெற்றிச் சிறப்பை அவன் பெயரோடு இணைத்துப் பெருமை செய்தனர்.

---

*"வேந்து விடு முனைஞர், வேற்றுப் புலக் களவின்
ஆதந்து ஓம்பல் மேவற்றாகும்."

—தொல். பொருள். புறம் : 2.

பண்டு பசியால் வருந்திய பாலை நிலத்து மறவர், தம் அண்டையில் வாழ்வார் நிலத்துள், அவர் அறியாவாறு புகுந்து, அவர்களின் ஆனிரைகளைக் களவாடிக் கொணர்ந்து, கொன்று உண்டு வாழ்ந்த கொடிய ஒழுக்கம் நாள் ஆக ஆக, நாட்டு மக்கள் உள்ளத்தில் நாகரீகமும் நற்பண்பும் வளர வளர, படிப்படியே மாறி, இறுதியில் ஒரு நாட்டின்மீது, படை தொடுக்க விரும்பும் அரசன் ஒருவன், அந்நாட்டு ஆனிரைகள், தன் படையால் பாழுறு வண்ணம் காத்தற் பொருட்டும், ஒரு நாட்டின்மீது, அந்நாட்டார் அறியாத நிலையில் படை தொடுத்தல் அறமாகாது என உணர்ந்து, அந்நாட்டின்மீது தான் படை தொடுக்கப்போவதை முன் அறிவித்தற் பொருட்டும், அந்நாட்டு ஆனிரைகளைக் கைப் பற்றிக் கொணர்ந்து பாதுகாக்கும் நல்லொழுக்கமாகி விட்டது.

பாண்டியன் பல்யாகசாலை முதுகுடுமிப் பெருவழுதி என்ற பேரரசன் ஒருவன், பகை நாட்டின் மீது படை தொடுக்கும் முன், "பகைநாட்டு ஆனிரைகளே! ஆவின் இயல்புடைய அந்தணர்களே! பெண்களே! பிணியுற்றவர்களே! மக்கட் பேறுபெறாத மாவீரர்களே! யாம் விரைந்துவந்து வில்வளைத்து அம்பு ஏவுவம்; ஆகவே, நீவிர் அரண்மிக்க இடம் தேடி அடையுங்கள்" எனப் பறையறைந்து அறிவித்துவிட்டு பின்னர்ப் போர் புரியும் அறவழி நின்று அரசு புரிந்தான் எனப் புறநானூறு கூறுகிறது. *நிற்க.

---

*"ஆவும், ஆன்இயல் பார்ப்பன மாக்களும்,
பெண்டிரும், பிணி உடையீரும், பேணித்
தென்புல வாழ்நர்க்கு அருங்கடன் இறுக்கும்
பொன்போல் புதல்வர்ப் பெறுஅதீரும்
எம் அம்பு கடிவிடுதும், நும்மரண் சேர்மின் என
அறத்தாறு நுவலும் பூட்கை"

—புறநானூறு : 9.

போர் நிகழ்ச்சிகளைக் கூறும் தொல்காப்பியரும் பிற ஆசிரியர்களும் போர் இத்தனை வகைப்படும் என்றுதான் கூறுகின்றனரே அல்லது, போர் நிகழ்வதன் முன் வெட்சியும் கரந்தையும், அதாவது ஆனிரை கவர்தலும், ஆனிரை மீட்டலும் நிகழ்ந்தேயாதல் வேண்டும் என்று கூறவில்லை. போர் பல காரணங்களை முன்னிட்டு எழும். பொன்னாசை யால் எழும் போர், மண்ணாசையால் எழும் போர், பெண் ணாசையால் எழும் போர், புகழாசையால் எழும் போர் என அது பலவகைப்படும். அவற்றுள் இது பொன்னாசையின் ஒரு பகுதியாய்ப் பகைநாட்டுப் பொருளை எல்லாம் பெறவேண்டும் எனப் பேராசை கொள்ளாது, அவர்களுடைய ஆனிரைகளை மட்டும் பெற்றால் போதும் என்ற ஆசை காரணமாய் எழுந்த போரும் அதன் பின் விளைவுமாம் என அறிக.

நிரை கவர்தலும், நிரை மீட்டலும் முறையே சென்று தாக்குவாராலும், நின்று தாங்குவாராலும், தம் போர் நிகழ்ச்சியின் தொடக்க நிகழ்ச்சிகளாக மேற்கொள்ளப் பெறுவனவே. அந் நிகழ்ச்சிகள், அவ்வரசர்கள் மேற் கொள்ளும் பிற போர்களோடு தொடர்புடையன ஆகா. நிறைகவர்தல் போரிலும், நிரை மீட்டல் போரிலும் தொழிலாற்றும் படைகள், இருதிறத்தார்களின் எல்லைக் கண் நிற்கும் படைகளே. இரு பேரரசர்களோ, அவர்களின் நாற் படைகளோ, ஈடுபடுவதில்லை.

வாழ்க்கைத் தரம் உயர உயர, ஒருவன் ஆசைகளும் பலவாம். ஆசைகள் பலவாம் எனினும், அவற்றைப் பொன் ஆசை, மண் ஆசை, பெண் ஆசை என்ற முப்பெரும் பிரிவி னுள் அடக்கிவிடலாம். ஆகவே, அரசன் ஒருவன், பகைவர் நாட்டுச் செல்வங்களைக் கொள்ளை கொண்டு வரவும், பகைவர் நாட்டைக் கைப்பற்றிக் கொள்ளவும், அந்நாட்டு அரசன் மகளை மணம் செய்து கொள்ளவும் ஆசை கொண்ட வழியே படை எடுத்துச் செல்வான், இவற்றுள், பகைவர் நாட்டுச்

செல்வங்களைக் கருதிப் போருக்கு எழுதல் முதற்படியாகும். அது பாலை நிலத்து மறவர் செயலைக் காட்டிலும் சிறிதே வேறுபடும். பகைவர் நாட்டுப் பசுநிரைகளை மட்டுமே கவர்ந்து வரச் செல்லுதல் முதல் நிலை; பகை நாட்டுப் பெரும் பொருள் அனைத்தையுமே கைப்பற்றி வரச் செல்லுதல் முடிந்த நிலையாம். பொருளைக் கவர்ந்து வரப் போருக்கு எழும் வழக்கத்தை மேற்கொண்ட வேந்தன், காலம் செல்லச் செல்ல, பொருள் வேண்டும்போதெல்லாம் படையெடுத்துச் செல்வதைக் காட்டிலும், பொருள்வளம்மிக்க அந்நாட்டையே கைப்பற்றித் தனதாக்கிக்கொள்வது நன்று என நினைப்பான். நினைத்தவாறே, பகைநாட்டை வென்று கைப்பற்ற போருக்கு எழுவான்; இது இரண்டாம் நிலை. நல்ல நாடும், அதனால் நிறைபொருளும் பெற்று வாழும் அரசனுக்கு, இன்ப நுகர்வில் நாட்டம் உண்டாதல் இயல்பு. ஆகவே, அந்நிலையில், அவன், வேற்றரசர்பால் அழகுள்ள மகளிர் வாழக் கண்டு அவரை மணந்து வாழ மனங்கொள்வதும், அதற்கு அவ்வரசர் மறுத்தால், அவர்மீது படையெடுத்துப்போவதும் நிகழும். இது மூன்றும் நிலை.

பகையரசனுக்குரிய பெரிய படை தன் நாட்டின் எல்லைக்குள் புகுந்துவிட்டது. இப்போது படையெடுத்து வரும் அவன் கருத்து ஆனிரை கவர்தல் அன்று. தன் நாட்டுப் பெரும் பொருளையோ, அல்லது தன்னாட்டின் வளமிக்க பகுதியையோ, அல்லது தன் மகளையோ கருதியே அவன் வருகிறான். ஆகவே, அதற்கேற்பப் பெரும் போர் புரியத் தக்க நாற்படைகளுடனேயே வருகிறான் என அறிந்த அந்நாட்டரசன், பாய்ந்துவரும் பகைவர் படையால் பாழுற்றுப் போகாதபடி நாட்டைக் காப்பான்கருதித், தன் படைகளோடு விரைந்து, அப்படை தன் நாட்டுள் புகுந்துவிடாதபடித் தடுத்து நிறுத்திப் போர் புரிவன். இவ்வாறு, இம்மூவாசை கருதிப் படையெடுத்து வந்தவனை வென்று துரத்தும் வேந்தன் செயல்களை வஞ்சிப் போர் எனப் பெயரிட்டுப் பாராட்டியுள்

ளார், ஆசிரியர் தொல்காப்பியனார்.* போர் தொடுத்தலும், அடித்துத் துரத்தலுமாகிய இந்நிகழ்ச்சிகளெல்லாம், வந்த வேந்தனுக்குரிய எல்லைப் பகுதியும், வென்று துரத்திய வேந்தனுக்குரிய எல்லைப் பகுதியும் ஆகிய இரு நாட்டுப் புற நாடுகளில் நிகழும் நிகழ்ச்சிகளே ஆம். படைதொடுப்பதற்கு வேண்டிய முன்னேற்பாடுகள், புகுந்த அரசன் நாட்டெல்லையில் நிகழும். அடித்துத் துரத்துவது போன்ற போர் நிகழ்ச்சிகள், துரத்திய அரசன் நாட்டெல்லையில் நிகழும்.

மண்ணாசையால் படைகொண்டு வந்த அவனை, அடித்துத் துரத்திய இவன், அவன் படையெடுத்து வந்தான் என்பது ஒன்றைக்கொண்டே எதிர்க்கக் கருதினவனாவன். ஆகவே, இவன் வினை, அவனை வென்று ஓட்டுவதோடு முடிந்துவிடும். அவன், தன் நாட்டு எல்லையைக் கடந்து ஓடிவிட்டான் என்பதை அறிந்தவுடனே, இவன் மீண்டுவிடுவன். அவனை மேலும் துரத்திச் சென்று, அவன் நாட்டைக் கைப்பற்றக் கருதான். அவன் நாடு, இவன் நாட்டைக் காட்டிலும் வளம் செறிந்த நாடன்று. மாறாக வளம் குன்றிய நாடு அது. வளமார் நாட்டில் வாழ்வார் எவரும், வளம் குன்றிய நாட்டினைக் கைப்பற்றி ஆளக்கருதார். அதனால் அவர்க்குக் கேடல்லது ஆக்கம் உண்டாதல் இல்லை.

ஒரு நாட்டை, அரசன் ஒருவன் கவர்ந்துகொள்ள விரும்புகின்றான் என்றால், அந்நாடு அவன் நாட்டைக் காட்டிலும் சிறந்து விளங்கும் நாடாதல் வேண்டும். "பெரும் பொருளால் பெட்டக்க" நாடுகளையே பகைவர் பற்றிக் கொள்ள விரும்புவர். நிறைபொருளும், மிகுவளனும் உடைமையால்

---

*"வஞ்சிதானே, முல்லையது புறனே"
"எஞ்சா மண்நசை வேந்தனை, வேந்தன்
அஞ்சுதகத் தலைச் சென்று அடல்குறித் தன்றே"

—தொல் பொருள். புறம் 1 6, 7.

சிறப்புற்று விளங்கும் நாடுடையான் ஓர் அரசன், தன் அண்டைநாடும், தன் நாட்டைப் போலவே நிறை பொரு ளும் பெறுவளமும் பெற்றுளது என்பதற்காகவே, அந்நாட் டின் மீது படை எடுக்க எண்ணுன், அண்டை நாட்டைக் காட்டிலும் வளம் குன்றி வறுமையுற்று வாடும் நாடுடைய வரே, அவ்வண்டை நாட்டின்மீது படையெடுத்துச் செல்வர். இது உலகோர் அறிந்த உண்மை.

ஆகவே, அவன் இவன் நாட்டின் மீது படையெடுத்து வந்தான் எனவே, அவன் நாடு, இவன் நாட்டைக் காட்டி லும் வளம் குறைந்த நாடு என்பது பெறப்படும். படவே வளம் குறைந்த அந்நாட்டின் மீது, இவனுக்குக் காதல் உண்டாகாது என்பதும் பெறப்படும். காதல் இல்லா நாட்டைக் கைப்பற்றக் கருதார் எவரும்; ஆகவே, இவன் கடமையாகக் கருதப்படுபவை அனைத்தும், இவன் நாட்டு எல்லைக்குள் நிகழும் நிகழ்ச்சிகளே ஆகும். இவன், அவன் நாட்டுள் புகுந்து போரிடுவது இலன். தன் நாட்டின் மீது படையெடுத்து வந்தவனை எதிர்த்துத் துரத்தும் தற்காப்புப் போரே இவன் செய்யும் போர். பகை நாட்டுள் புகுந்து மேற்சென்று தாக்கும் போர் அன்று. வந்த அவன், தன் நாட்டு எல்லையைக் கடந்து அவன் நாட்டுள் ஓடிப் புகுந்து கொண்ட பின்னரும், விடாது துரத்திச்சென்று போரிடுவது கூடாது. இவன் அவ்வாறு போரிடக் கருதுவனுயின், மண் ணுசைக் குற்றம் இவனுக்கும் கற்பிக்கப்படும். ஆகவே, இவன் செயலெல்லாம், இவன் நாட்டு எல்லைக்குள்ளேயே நின்று விடும்; இவன் அவன் மண்ணில் காலடி எடுத்து வைப் பதும் கூடாது.

நாடு இன்று காட்சி அளிப்பதுபோல் அன்று காட்சி அளிக்கவில்லை. இன்று எங்கு நோக்கினும் நகரங்கள் மலிந்த நாடே காட்சி அளிக்கிறது; காட்டைக் காண்பதும் அரிதாகி விட்டது. பண்டைய நிலை இதுவன்று. அன்று எங்கு நோக் கினும் மரங்கள் செறிந்த நாடே காட்சி அளித்தது; நகர்

வளம் மிக்க நாட்டை, அரிதாகவே காணல்கூடும். அக்கால அரசர்கள், காடுகளைச் சிறிது சிறிதாக அழித்து நாடு கண்டு வந்தனர். அப்பணியை பெரும் அளவில் புரிந்து வெற்றி கண்ட கரிகாற் பெருவளத்தானை, "காடுகொன்று நாடாக்கி, குளம் தொட்டு வளம் பெருக்கி" எனப் புலவர்கள் வாயார வாழ்த்தி யுள்ளமை காண்க. ஆகவே, அக்கால நாடு ஒவ்வொன்றும் தன்னைச் சூழப், பரந்த காட்டுப் பகுதிகளைக் கொண்டிருந்தது என்பது உண்மை. ஆகவே, இரு நாடுகளுக்கிடையே, இரு நாடுகளுக்கும் உரிய காட்டுப்பகுதிகளே இடம் பெறும். ஆக, நாடு பிடிக்க விரும்புவான் ஒருவன், முதற்கண், தன் அண்டை நாட்டானுக்குரிய காட்டுப் பகுதியையே கைப்பற்றுவன். ஆகவே, நாடு கவர்தல் குறித்தும், அதைக் காத்தல் குறித்தும் நிகழும் போர், அக்குறுங் காடுகளிலேயே நிகழும்.

மண்ணாசை கொண்டு மாற்றானொடு போரிடப் போந்த ஒரு வேந்தன், அப்போரை விரும்பி மேற் கொண்டவனாதலின், தன்வலி, மாற்றான்வலி, தனக்கு ஆகும் காலம், மாற்றானுக்கு ஆகும் காலம் ஆகியவற்றை ஆராய்ந்து பார்த்து, பகைவன் நாட்டுள் புகுந்து போரிட்டு வெற்றி பெறக்கூடிய பெரும் படையோடு, தனக்கு ஏற்ற காலத்தில் திடுமெனப் புகுந்திருப்பன். ஆனால், அவன் பகைவன் அவ்வாறு வந்தவனல்லன். பகையரசன், படையோடு புகுந்து, தன் நாட்டின் ஒரு பகுதியைக் கைப்பற்றிக் கொண்டான் என்பதறிந்தவுடனே விரைந்து வந்தவனாவன். அந்நிலையில் பகைவன் படைபலம் யாது? தன் படைபலம் யாது என்பன பற்றியோ, அக்காலம், தன் வெற்றிக்கு வாய்ப்பளிக்கும் காலம்தானா என்பதையோ எண்ணிப் பார்த்தல் இயலாது. உள்ள படையைக்கொண்டு, உடனே புறப்படவே அவன் உள்ளம் துடிக்கும். தனக்குத் துணைபுரிவாரைத் தேர்ந்து, அவரை உடன் அழைத்துப் போகவும் ஒண்ணாது. இக்காரணங்களால், அவன் படைதொடுத்து வந்தானை வெல்லமாட்டாது, தோற்றுப் போதலும் உண்டு.

தோல்வியுற்றது அவன் படை என்பதனாலேயே அவன் பணிந்து போக வேண்டும் என்பது வேண்டியதில்லை. சிறிது காலம் கழியின், வந்தவனை அவனால் வென்று ஓட்டுவதும் இயலும். அதற்குள் அவன் போரிடற்கு ஏற்ற காலமும் வந்து வாய்க்கும். அவனோடு நட்புடைய அரசர் சிலர், அவனுக்குப் படைத்துணை அளிப்பதும் செய்வர். ஆகவே, அக்காலத்தை எதிர் நோக்கும் அவன், அதுவரை பகைவனுக்குப் பணியாமலும், அவனால் அழிவுறாமலும் தன்னையும் தன் படையையும் காத்துக் கொள்ளுதல் வேண்டும். அதுவே, தலையாய போர் முறையாம். ஆகவே, அவன், அவன் நாட்டில் தக்கதோர் இடத்தில் அமைத்து வைத்திருக்கும் அரணுள் புகுந்து கொள்வன்.

மேலும், பகைத்துப் படையெடுத்து வந்திருக்கும் வேந்தன் தங்கியிருப்பது பகைவன் நாட்டில். அவனை ஆங்கு நெடிதுநாள் தங்கவைப்பின், அவன், தன் பெரும் படைக்குத் தேவையான உண் பொருள் முதலாயின பெற மாட்டாது வருந்த வேண்டி நேரிடும். அந்நிலைபெற்று அழிந்து போவதை விட, கருதி வந்த வெற்றியைக் கைவிட்டுப் போய் விடுதலும் கூடும். இதைக் கருதியும், தோற்ற அந்நாட்டு அரசன் அரணுள் புகுந்து வாழ்வது வழக்கம்.

நிலம் விட்டு நிலம் சென்று, நாடோடி வாழ்வினராய அலைந்திருந்த மக்கள், நிலைத்த வாழ்வினராகி, நிலத்தை உழுது பயன் கொள்ளத் தொடங்கிய காலத்தில், அவர்களிடையே செல்வமும் சேரத் தொடங்கிற்று. நிலத்தில் விளைந்த பொருள்களோடு அவற்றுள் தமக்கு வேண்டியன போக எஞ்சியவற்றை அவை கிடைக்காத நாட்டாருக்கு அளித்து ஆங்குக் கிடைக்கும், தமக்கு வேண்டிய பொருள்களைப் பெற்று வந்த வாணிக வாழ்வின் வழிவந்த பொருள்களும் அவர்பால் குவிந்தன. குவியவே, அவற்றைக் கேடின்றிக் காக்க வேண்டிய கருத்து உண்டாயிற்று. அந்நிலையிலேயே அரண் அமைக்கும் அறிவினை அவர்கள் பெற்றனர்.

இந்நிலை உண்டானது, வயல் வளமும், வாணிகவளமும் வளர்தற்கு வாய்ப்பளிக்கும் மருத நிலத்து மாநகர்களிலேயே ஆகும். ஆகவே, அரண் அமைந்த அம்மாநகர்களே, அரண் கருதிய போர்களின் நிலைக்களமாய்க் காட்சி அளித்தன. நிற்க.

அரசனும், அவன் பெரும் படையும் அரணுள் புகுந்து கொள்வராயின், அவர் படையுள் ஒரு பிரிவினர், அரணிற்கு வெளியில் இருந்து கொண்டே அரணை முற்றியிருக்கும் பகைவர் படையினை அவ்வப்போது தாக்கியும், அப்படையால் தம் அரண் அழிந்து போகாதபடிக் காத்தும் நிற்பர். புறத்தான் அயர்ந்திருக்கும் சமயம் நோக்கி, அகத்தார் திடுமெனப் புறம் போந்து பகைவர் படையுள் ஒரு பகுதியைப் பாழ் செய்துவிட்டு மீண்டும் அரணுள் புகுந்து அடங்கிவிடுவதும் ஒரோ வழி நிகழும்.

அரணுட்புகுந்து அடங்கவிரையும் தம் அரசனையும் படையையும் பகைவர் படை பின்பற்றிச் சென்று அழிக்காதபடி அப்பகைவர் படையினைத் தடுத்து நிறுத்துதல் வேண்டுமாதலின், பாய்ந்து வரும் பகைவர் படையினை எதிர்த்து வீரர் சிலர் போரிடுவதும், அவருள் சிலர் உயிரிழப்பதும் உண்டு. அரணைச் சுற்றி அமைந்திருக்கும் மதிலுக்குப் பேரரண் புரிந்து நிற்பன அகழியும், அகழியைச் சூழ உள்ள காவற்காடுமாம். ஆகவே, அரண் அழியாமையை விரும்புவார், அவ்விரண்டினையும் அழிய விடாமல் காத்தல் வேண்டும். ஆகவே அரண் புறத்தே விடப்பட்ட அந்நாட்டுப் படையாளர் சிலர், காவற்காட்டினை அழித்தும், கிடங்கினைத் தூர்த்தும் அரண் அழிக்கும் பகைவர் படையினைப் பாழ்செய்வதும், அப்போரில் உயிர் துறப்பதும் உண்டு. காவற்காட்டையும், கிடங்கையும் அழிப்பதில் வெற்றி கண்ட பகைவர் படை, பின்னர், அரண் மதிலை அழிக்க முனையும். அப்போது, அரண் அகத்தே அடங்கியிருக்கும் படையாளர், அம் மதில் தலையில் இருந்தவாறே புறத்தாரோடு போரிட்டு அம்மதிலைக் காக்க முனைவர். அப்

போரிலும் சிலர் உயிரிழந்து போவர். பகைவர் பெரும் படை கொண்டு பலகாலும் தாக்குவதால், மதிலின் ஒரு பகுதி அழிந்து போவதும், அதன் ஊடே, பகைவர் படை அரணுள் புகுதலும் உண்டு. அவ்வாறு நுழையும் அப்படையினை, அரணகத்துப் படையினைச் சேர்ந்த சிறந்த வீரர் ஒன்றுகூடி உரங் கொண்டு தாக்கித் துரத்துவர். இவ்வாறு ஒருவன் அரணை வளைத்துக் கொள்வதும், வளைத்துக் கொள்ளப்பட்டவன் வளைத்துக் கொள்வோனை வென்று துரத்தி விட்டு அரணைக் காப்பாற்றிக் கொள்வதுமாகிய இப்போர் நிகழ்ச்சிகளை, உழிஞை எனப் பெயரிட்டு அழைக்கிறார் ஆசிரியர் தொல்காப்பியனார்.*

ஒருவனுக்கு மண் பொன் பெண் என்பனவற்றின் பால் எவ்வளவு ஆசை உண்டோ, அவ்வளவு ஆசை புகழின்பாலும் உண்டு. "தோன்றின் புகழொடு தோன்றுக" என்றார் வள்ளுவப் பெருந்தகையார். புகழ் பெறும் வழிகளாகக் கல்வி, செல்வம், கொடை எனப் பல உளவேனும், கொற்றத்தால் பெறும் புகழையே வெற்றி வீரர்கள் விரும்புவர். ஆகவே, பரந்த நாடும் சிறந்த செல்வமும், நிறைந்த இன்பமும் பெற்று, வாழும் பேரரசன் ஒருவன், தன் ஆண்மையை, ஆற்றலை அனைத்துலகமும் அறிய வேண்டும், அங்கெல்லாம் தன் வன்மையை நிலைநாட்டி வருதல் வேண்டும் என விரும்பி, வேற்று நாடுகள் மீது படையெடுத்துப் போவதும் உண்டு. அத்தகைய பேராற்றல் வாய்ந்த அவனுக்குரிய நாட்டிற்கு அண்மையில் உள்ள நாடுகள் எல்லாம் அவன் ஆட்சிக்கு உட்பட்டுக் கிடக்குமாதலின், அவன் தன் ஆற்றலை நிலைநாட்ட மிக மிகச் சேய்மைக்கண் உள்ள நாடுகளுக்கே செல்லுதல் வேண்டும். பெரும்

---

*"உழிஞை தானே மருதத்துப் புறனே."
"முழுமுதல் அரணம் முற்றலும் கோடலும்
அனைநெறி மரபிற்று ஆகும் என்ப."

—தொல்: பொருள்: புறம்: 9, 10.

பாலும் கடல் கடந்த நாடுகளுக்குச் சென்று செய்யும் போரையே பெரிதும் விரும்புவன். கரிகாற் பெருவளத்தான் ஈழநாட்டில் பெற்ற வெற்றியும், இராச இராசனும், இராஜேந்திரனும் கடாரம் முதலாம் கீழை நாடுகள்மீது கொண்ட வெற்றியும், இவ்வகையைச் சேர்ந்தனவே. காவிரிக் கரையோனாகிய கரிகாலன், கங்கைக் கரையில் பெற்ற வெற்றியும், கிரேக்கமாவீரன் அலெக்சாந்தர் இந்திய மண்ணில் பெற்றவெற்றியும் அத்தகையவே. கரிகாலன் என்ற இயற்பெயருடையோனாகிய திருமாவளவன், தமிழகம் அனைத்தையும் வென்று கைக்கொண்டு விட்டமையால், தன் தோளாற்றலை நிலைநாட்டவல்ல பெரும் போரை, அங்கு மேலும் நிகழ்த்த வாய்ப்பில்லாமை கண்டே வடநாடு நோக்கிப் போர் விரும்பிப் புறப்பட்டான் எனச் சிலப்பதிகாரம் கூறுகிறது.*

கடல்கடந்த பிற நாடுகளுக்குத் தமிழ் அரசர் சென்று தம் ஆற்றலை நிலைநாட்டியது போலவே, பிறநாட்டு அரசர் சிலர், தமிழ் நாட்டிற்கு அவர் ஆற்றலைக் காட்ட வந்திருத்தலும் கூடும். அவ்வாறு வந்த அரசர்களைத் தமிழ் அரசர் வென்று துரத்தியிருத்தலும் கூடும். பிற நாட்டு அரசர்கள், இந்நாட்டு ஆனிறைகளைத் தம் நாடுகளுக்குக் கொண்டு செல்வதோ, இந்நாட்டை வென்று இந்நாட்டிலேயே இருந்து ஆளுவதோ இயலாது ஆதலின், அவர்களின் போர் நோக்கம் எல்லாம் ஆற்றலை நிலைநாட்டுவது ஒன்றே ஆகும்.

---

* "இருநில மருங்கில் பொருநரைப் பெறுஅச்
செருவெம் காதலின் திருமா வளவன்
வாளும் குடையும் மயிர்க்கண் முரசும்
நாளொடு பெயர்த்து, நண்ணார்ப் பெறுக இம்
மண்ணக மருங்கின் என்வலிகெழுதோள் எனப்
புண்ணிய திசைமுகம் போகிய அந்நாள்."

—சிலப்பதிகாரம்: 5: 89—94

இவ்வாறு ஆற்றல் காட்டவந்த அரசர்களையும் வென்று துரத்தவல்ல வேந்தர்களும் தமிழ்நாட்டில் இருந்தனர். அவ்வாறு துரத்துங்கால், வந்த வேந்தன், மரக்கலங்களை விட்டு, கடற்கரை மண்ணில் காலிட்டவுடனே, கடும் போர் இட்டு அடித்துத் துரத்துவதும் உண்டு. அவன் வருகையை முன் அறிந்து கொள்ள முடியாத வகையில், அவன் திடுமென வந்து விடுவதும் உண்டு. அதனால் அவன் தொடக்கத்தில் கடற்கரையையும், காட்டையும் கடந்து அகநாடுவரை வெற்றிக் கொடிகளை நாட்டி விடுவதும் உண்டு. அவன் வருகையை அந்நிலையில் அறிந்து கொள்ளும் இந்நாட்டரசன் அவனை ஆங்கு மடக்கிப் போரிட்டு வெல்வதும், வெல்வதோடு அமையாது, அவன் கலம் ஏறிக் கடல் புகும் வரையில் துரத்திச் செல்வதும் உண்டு. இதனால் வந்தவனை வென்றழிக்கும் போர், பெரும்பாலும் கடற்கரையை ஒட்டிய பகுதிகளிலேயே நடைபெறும். மேலும் வந்தவன், தன் ஆண்மையை நிலைநாட்ட வந்தவனாதலின், அவன்பால் பேராற்றலும் பெரும் படையும் இருக்கும். ஆகவே, அத்தகையானை வென்று துரத்தக் கடும் போரிட நேரிடும். அதற்கு மரங்கள் நிறைந்த காடோ, வயல்கள் நிறைந்த நாடோ, வாய்ப்புடைய இடமாகா. மணல் நிறைந்து பரந்து கிடக்கும் கடற்கரையே சாலவும் சிறந்த இடமாம். ஆகவே, அவனை வென்று அழிக்க விரும்பியவன், அவனை எவ்வாறேனும் அக்கடற்கரைக்குக் கொண்டு சென்றே போரிட்டு அழிப்பன். இவ்வாறு தன் ஆற்றலை நிலைநாட்டு வதையே முன்னிறுத்திப் போர் தொடுத்து வருவோனை வென்று துரத்தும் போரைத் தும்பைப் போர் எனப் பெயரிட்டு அழைக்கிறார் ஆசிரியர் தொல்காப்பியனார்.*

---

* "தும்பை தானே நெய்தலது புறனே"

"மைந்து பொருளாக வந்த வேந்தனைச்
சென்றுதலை அழிக்கும் சிறப்பிற்று என்ப."
—தொல்: பொருள்: புறம்: 14—15.

ஆக, இதுகாறும் கூறியவற்றால், பகைவர் கவர்ந்து சென்ற தம் ஆனிரைகளை மீட்கவும், பகைவர் கைப்பற்றிக் கொண்ட தம் நாட்டை மீட்டும் பெறவும், பகைவரால் வளைத்துக் கொள்ளப்பட்ட தம் கோட்டைகளைக் காக்கவும், தன் ஆற்றல் காட்டவந்து அழிவு விளைக்கும் அயல் நாட்டானை அடித்துத்துரத்தவுமே தமிழர்கள் படையெடுத்தனர். ஆகவே அவர் போரெல்லாம் தற்காப்புப் போரே; தமிழர் வலியச் சென்று பிறநாடுகளைத் தாக்கியவரல்லர்; ஆனால் வலிய வந்த போர்களை விடாது வெற்றி கண்டனர் என்ற உண்மைகள் புலனாகி, போர்க்களத்திலும் அறம் பிறழாத் தமிழர்களின் தலையாய நாகரிகம் நிலை நாட்டப்பட்டதாம். மேலும் தமிழ் நாட்டுப் போர்கள், இயற்கையின் தேவையை அடிப்படையாகக் கொண்டு, ஒன்றன்பின் ஒன்றாக வளர்ந்து இடம்பெற்ற முறையும் விளங்கி நிற்றல் அறிக.

# 2. போரிட்ட வேந்தர்

தமிழ் நாடு வயல் வளத்திலும், வாணிக வளத்திலும் சிறந்து, உலக அரங்கின் உயர்ந்த இடத்தில் அமரப் பெருந்துணை புரிந்தவர், அத்தமிழ் நாட்டை, அன்று ஆண்டிருந்த முடியுடைய மூவேந்தர்களே என்றாலும், அத்தமிழ்நாடு, இன்று தாழ்ந்த நாடாய்த் தளர்ந்து போனமைக்கும் அவர்களே காரணமாவர். மூவேந்தர்கள் மொழியை முன்நிறுத்தி ஒற்றுமை உள்ளம் கொண்டு உலகாள்வதற்கு மாறாக, சேரர் சோழர் பாண்டியர் என்ற குலப் பெருமையே குறிக்கோளாய் ஒற்றுமையைக் குலைத்து, வேற்றுமையை வளர்த்து வந்தனர். மூவேந்தர் குலத்தில் பிறந்த ஒவ்வொருவரும், பிறரை அடக்கி ஆளவேண்டும் என்ற எண்ணத்தோடே பிறந்தனர். ஒரு குலத்தில் ஒரு காலத்தில், ஆற்றல் மிக்க அரசன் ஒருவன் பிறந்து விட்டால், அவன் பிற இரு குலத்து அரசர்களையும்

வென்று அடக்கி, அரசர்க்கு அரசனாய் வாழ ஆசை கொள்வதும், அவன் பெருமை கண்டு மனம் பொறுக்க மாட்டாத பிற இருகுலத்து அரசர்களும் ஒன்றுபட்டுக் குறுநிலத் தலைவர்களின் துணையையும் பெற்று, அவனோடு சமர் புரிந்து அவனை அழிக்க முனைவதும், அக்கால அரசியலின் அழிக்க முடியாத வழக்கங்களாகி விட்டன. அம்மட்டோ! ஒரு குலத்தவர், பிறகுலத்தவரோடு போரிட்ட நிலையோடு நின்றுவிடவில்லை. ஒரு குலத்தில் பிறந்தவர்களுக்குள்ளேயே, ஒருவர் ஒருவரோடு போரிட்டுக்கொள்ளவும், மகன் தந்தைமீது போருக்கு எழவும் தந்தை தான் பெற்ற மகனையே போரிட்டு அழிக்கவும் அக்காலத் தமிழரசர்கள் உரிமை பெற்றிருந்தனர். அவ்வுரிமையின் விளைவுகளில் ஒன்று இக்கழுமலப் போர்.

கழுமலப் போரில் கலந்துகொண்டவர்கள், சேரமான் கணைக்கால் இரும்பொறையும், சோழன் செங்கணானும் ஆவர். இருவரும் தமிழர் என மொழியால் ஒருவரேயாயினும், குலவழியால் வேறுபட்டவராவர். சேரமான் கணைக்கால் இரும்பொறை, சேரருள் ஒரு பிரிவினரால் இரும்பொறை மரபில் வந்தவனாவன். பரந்த சேரநாட்டைச், சேர வேந்தர்கள் இரு கிளையினராய்ப் பிரிந்து ஆண்டுவந்தனர். பெருஞ் சோற்று உதியன் சேரலாதன் வழிவந்த சேரர், வஞ்சிமா நகரைத் தலைநகராகக்கொண்ட சேரநாட்டு உட்பகுதியையும், அந்துவஞ்சேரல் இரும்பொறை வழி வந்தோர், தொண்டியைத் தலைநகராகக் கொண்ட சேர நாட்டுக் கடற்கரைப் பகுதியையும் ஆண்டு வந்தனர்.

தொண்டி, மாந்தை, நறவு போன்ற மாநகர்களை அரசியல் தலைநகர்களாகவும் வாணிக நிலையங்களாகவும் கொண்டு, மேற்குத் தொடர்ச்சி மலைக்கு அப்பால், கடலை அடுத்திருந்த சேரநாட்டை ஆண்டிருந்த இரும்பொறை மரபினருள் சிறந்தவன் கணைக்கால் இரும்பொறை. இவன் கணையன் எனவும் கோதை எனவும் புலவர்களால் அழைக்கப் பெற்றுளான்.

இரும்பொறை ஆண்ட நாடு, கடல் வளத்தோடு, வயல் வளமும், மலை வளமும் வாய்ந்திருந்தது. மலைநாட்டு மக்களாகிய குறவர், தங்கள் தினைப்புனத்தில் விளைந்து முற்றிய கதிர்களைத் தின்னவரும் பறவைகளை ஓட்ட, கிளிகடி கருவிகளைத் தட்டி ஒலி எழுப்பினால் செந்நெற் கதிர்கள் தலைசாய்ந்து ஆடும் வயல்களிலும், நீர் நிறைந்து வழியும் உப்பங்கழிகளும் இரை தேடி வாழும் பறவைகள், அவ்வொலி கேட்டு அஞ்சி, ஒருசேர எழுந்து பறந்து ஓடும். இவ்வாறு அந்நாடு, கடற் பகுதியையும், வயல் வெளிகளையும், மலைக்காட்டையும் ஒருங்கே பெற்றிருப்பதால், அந்நாடாளும் அவனைக் கடல் நாடாகிய நெய்தல் நிலத் தலைவனைக் குறிக்கும் சேர்ப்பன் என்றோ, வயல்கள் மலிந்த மருத நிலத் தலைவனைக் குறிக்கும் ஊரன் என்றோ, மலைவளம் மிக்க குறிஞ்சி நிலத் தலைவனைக் குறிக்கும் நாடன் என்றோ பெயரிட்டு அழைக்க முடியாமல் வருந்தியுள்ளார் அவன் அவைக்களப் புலவரும், அவன் ஆருயிர் நண்பரும் ஆகிய புலவர் பொய்கையார்.*

சேரமான் கணைக்கால் இரும்பொறை சிறந்த வீரனவன்; அவன்பால் ஒரு பெரிய படையும் இருந்தது. வேற்படைப் பயிற்சி பெற்றிருந்த அப்படையை வென்று அழிப்பது எவராலும் ஆகாது; அப்படையோடு என்றும் பாசறைக்கண் வாழ்வதையே அவன் விரும்புவன். அப்பெரும் படையை அடக்கி ஏவல் கொள்ளத்தக்க உடல் வன்மையும் அவனிடம் பொருந்தியிருந்தது. ஒருநாள், அவன் யானைப் படையைச்

---

*"நாடன் என்கோ ? ஊரன் என்கோ?
பாடுஇமிழ் பனிக்கடல் சேர்ப்பன் என்கோ?
யாங்ஙனம் மொழிகோ, ஓங்குவாள் கோதையை?
புனவர் தட்டை புடைப்பின், அயலது
இறங்கு கதிர் அலமரும் கழனியும்
பிறங்கு நீர்ச் சேர்ப்பினும் புள்ஒருங்கு எழுமே."

—புறநானூறு : 49

சேர்ந்த ஒரு யானை மதம் பட்டுவிட்டது. அதன் அழிவு வேலைகளால், அப்பாசறையே நடுங்கிவிட்டது; அதைப் பிடித்து அடக்கும் ஆற்றல் அங்கிருந்த வீரர் ஒருவர்க்கும் இல்லை. அதன் ஆரவாரம் கண்டு அஞ்சிய வீரர்கள் உறக்கத்தையும் மறந்து விட்டார்கள். அச்செய்தி கேட்டான் கணைக்கால் இரும்பொறை; விரைந்து பாசறைக்குச் சென்றான். அடங்காது அலைந்து திரிந்துகொண்டிருந்த அம்மத யானையை அடக்கிப் பிடித்து, அதன் கட்டுத் தறியில் பிணித்தான். பின்னரே வீரர்கள் உறங்கச் சென்றனர். யானையின் அழி செயல் கண்டு அஞ்சி, அலை ஒலிபோல் ஆரவாரம் செய்த அவர்கள் அமைதி உற்றனர். அலைஓசை அடங்கிய கடல் போல், கோட்டையிலும் அமைதி நிலவிற்று. அத்துணை அஞ்சாமையும், அதற்கேற்ற உடல் வன்மையும் உடையவன் இரும்பொறை.*

இரும்பொறை காலத்தில், மூவன் என்ற பெயர் பூண்ட வீரன் ஒருவன் வாழ்ந்திருந்தான். அவனும் இவனைப் போலவே கழிகளையும், கழனிகளையும் ஒருசேரக் கொண்ட வளம் மிக்க நாடுடையவனாய் விளங்கினான். அவன் நாட்டுக் கழிகளில், பகற்காலமெல்லாம் இரை தேர்ந்து உண்ணும் பறவைக் கூட்டம், இரவு வந்ததும், அவன் நாட்டு வயலோரங்களில் போட்டிருக்கும் நெற் போர்களில் சென்று தங்கும். நெய்தல் மணக்கும் நெல் வயல்களில் புகுந்து தொழில் புரியும் உழவர், உடல் தளர்ச்சி போக, மதுவை ஆம்பலின் அகன்ற இலையில் வார்த்து உண்டுவிட்டு, அம் மது மயக்கத்தால்,

---

*"கானல்அம் தொண்டிப் பொருநன்; வென்வேல்
தெறல்அரும்தானைப் பொறையன்; பாசறை
நெஞ்சம்நடுக்கு உறூஉம் துஞ்சா மறவர்
திரைதபு கடலின் இனிது கண்படுப்பக்
கடாஅம் கழீஇய கதன்அடங்கு யானை."

—நற்றிணை: 18

ஆங்கு வந்து ஒலிக்கும் கடலின் அலையோசைக்கு ஏற்ப அடியிட்டு ஆடுவர்.*

இத்தகைய வளம் மிக்க நாட்டைப் பெற்றுள்ளோம் என்ற செருக்குள்ளம் கொண்டு, மூவன், சேரனை மதிக்க மறுத்துவிட்டானோ, அல்லது மூவேந்தர் குடியில் வந்த தன்னைப்போலவே, குறுநிலத் தலைவனாகிய இவனும், வளமிக்க ஒரு நாட்டில் வேந்தனாய் வாழ்வதா எனப் பொறையன் உள்ளத்தில் பொறாமைத் தீ புகைந்து பற்றிக்கொண்டதோ, இருவர்க்கும் இடையே பகை வளர்ந்துவிட்டது. கணையன் படையோடு சென்று மூவனை வென்று அடக்கினான்; அவன் சினம் அம்மட்டோடு அடங்கவில்லை போலும்; அம்மூவன் பற்களைப் பெயர்த்தெடுத்து வந்து, தன் தலைநகராம் தொண்டிமாநகரின் தலைவாயிற் கதவில் வைத்து அழுத்தினான்.†

இவ்வாறு வெற்றி வீரனாய் விளங்கிய சேரமான், சிறந்த புலவனுமாவன். புறநானூற்றைப் பாடிய புலவர் வரிசையில் இடம் பெறத்தக்க பெரும் புலவனாய் வாழ்ந்திருந்தான். புலமையிற் சிறந்த பேரரசனாய் வாழ்ந்த அவன், பெரும் புலவர் ஒருவரைத் தன் ஆருயிர் நண்பராகப் பெற்ற பெருமையும் உடையவன். அவன் அவைக் களப் புலவராய்

---

*"பொய்கை நாரை போர்வில் சேக்கும்;
நெய்தல் அம்கழனி நெல்அரி தொழுவர்
கூம்புவிடு மென்பிணி அவிழ்ந்த ஆம்பல்
அகல்அடை அரியல் மாந்தித், தெண்கடல்
படுதிரை இன்சீர்ப் பாணி தூங்கும்
மென்புல வைப்பின் நன்னாட்டுப் பொருந!"

—புறநானூறு : 209

†"மூவன், முழுவலி முள்எயிறு அழுத்திய கதவின்
கானலம் தொண்டிப் பொருநன்."

—நற்றிணை : 18

விளங்கிய பொய்கையார், பாசறைக்கண் அவன் வேழத்தை வென்று அடக்கியதையும், மூவனை வென்று அடக்கியதையும், மூவனை வென்று அவன் பல்லைக் கோட்டைக் கதவில் அழுத்தியதையும் பாடிப் பாராட்டியுள்ளார். இரும்பொறைபால் பரிசில்பெற வந்தவர்களை வழியிடையில் கண்டு, பெரியோர்களே! நீங்கள் தொண்டி நகர் வாழும் அரசன்பால் செல்கின்றீர்போலும், மதுவளம் மிக்க அத்தொண்டிமா நகரே எம் ஊர்; அந்நகர்வாழ் அரசனே எம் தலைவன். அவனிடம் செல்லும் நீவிர், 'ஐய! நீ போரில் வெற்றி பெறுந்தோறும், அவ்வெற்றியை வாழ்த்திப் பாராட்டும் பொய்கையாரை வழியிடையே கண்டோம்' என்று கூறுங்கள். அவனைப் பாடிப் பாராட்டும் நீங்கள், அவன் புகழ் பாடும் என்னையும் மறவாது பாராட்டுங்கள். அப்பாராட்டு, பெரும் பரிசில் பெறத் துணை புரியும்" என்று கூறியதாகப் பாடிய பாட்டில், அவன் ஊரையே தம் ஊராகவும், அவனையே தம் தலைவனாகவும், அவன் புகழ் பாடுவதையே, தம் வாழ்வின் பயனாகவும் கொண்டு உரிமை பாராட்டும் புலவர்தம் பெருமைதான் என்னே!*

கழுமலப் போரில் வெற்றி கண்ட சோழன் செங்கணான், செங்கண்மால் எனவும், செங்கண் சினமால் எனவும் அழைக்கப்பெறுவோன். இவன் கழுமல வெற்றியை அறிவிக்கும் சங்க இலக்கியங்கள், இவன் வரலாறு அறியத் துணை புரிந்தில. இவன் கழுமல வெற்றியைப் பாராட்டும் களவழி நாற்பது என்ற நூல், இவனைப் 'புனல் நாடன்', 'நீர் நாடன்', 'காவிரி

---

*"கள் நாறும்மே கானல்அம் தொண்டி;
அஃது எம் ஊரே; அவன் எம் இறைவன்;
அன்னோன் படர்தியாயின், நீயும்
எம்மும் உள்ளுமோ. முதுவாய் இரவல!
அமர் மேம் படூஉம் காலை, நின்
புகழ்மேம் படுநனைக் கண்டனம் எனவே."

—புறநானூறு: 48

நாடன்' எனப் பெயரிட்டு அழைப்பதன் மூலம் இவன் நாடு, சோணாடு என்பதையும், 'செங்கண்மால்', 'செங்கண்சினமால்' எனப் பெயரிட்டு அழைப்பதன் மூலம் இவன் பெயர் செங்கணான் என்பதையும், 'இயல்திண் தேர்ச்செம்பியன்', 'புனைகழல்கால் செம்பியன்' எனப் பெயரிட்டு அழைப்பதன் மூலம், இவன் சிபி பிறந்த சோழர் குலத்தவன் என்பதையும், 'அருமணிப்பூண் ஏந்து எழில் மார்பு இயல்திண் தேர்ச் செம்பியன்', 'அடர்பைம்பூண் சேய்,' 'பொன்னார மார்பின் புனை கழல்கால் செம்பியன்', 'கண்ணார் கமழ் தெரியல் காவிரி நீர் நாடன்' என்ற தொடர்களால் பெயரிட்டு அழைப்பதன் மூலம், மணியாரமும், மலர் மாலையும் விளங்கும் மலர்ந்த மார்பையும், வீரக்கழல் கட்டிய கால்களையும் உடைய இவன் அழகுத் திருவுருவின் நலம் இத்தகைத்து என்பதையும், 'அதிராப் போர்ச் செங்கண்சினமால்', 'மடங்கா மறமொய்ம்பின் செங்கண் சினமால்', 'செருமொய்ம்பின் சேய்' எனப் பெயரிட்டு அழைப்பதன் மூலம், இவன் வீரம் இத்தகைத்து என்பதையும், 'பல்வேல், பணைமுழங்கு போர்த்தானைச் செங்கண்சினமால்', 'தடற்று இடம் கொள்வாள், தளை அவிழும் தார்ச்சேய்' 'கொற்றவேல் தானைக் கொடித்திண்தேர்ச் செம்பியன்', 'கொய்சுவல் மார்பின் கொடித்திண்தேர்ச் செம்பியன்' எனப் பெயரிட்டு அழைப்பதன் மூலம், இவன் வேற்படை, வாட்படை, தேர்ப்படை, குதிரைப்படை ஆகியவற்றின் கொற்றம் இத்தகைத்து என்பதையும், 'கொங்கரை அட்ட களத்து' எனவும், 'வஞ்சிக்கோ அட்ட களத்து' எனவும் கூறி, இவன் வென்றது கொங்கு நாட்டாராகிய சேரரையும் வஞ்சிமா நகரின் வேந்தனாகிய கணைக்கால் இரும்பொறையையும் ஆம் என்பதையும் அறிவிக்கின்றது.

சேக்கிழார் இயற்றிய, திருத்தொண்டர் புராணம் என்ற பெயர் பெற்ற பெரியபுராணம் இவன் வரலாறு குறித்துக் கூறுவது !

சோணாட்டில் காவிரியாற்றங்கரையில் ஒரு காடு இருந்தது. அக்காட்டில், ஒரு வெண் நாவல் மரத்தின் கீழ்ச், சிவ

பெருமானின் திருவுருவம் ஒன்று இடம் பெற்றிருந்தது. அதைத் தான் முற்பிறவியில் செய்த தவத்தின் பயனாய், ஒரு வெள்ளை யானை பார்த்தது. அன்று முதல், தன் துதிக்கையால் தூயநீர் கொண்டுவந்து அத்திருமேனியை ஆட்டியும், மணம் வீசும் மலர்க் கொத்துக்களைக் கொணர்ந்து அப்பெருமானுக்குச் சூட்டியும் வழிபடத் தொடங்கிற்று. அதனால், அக் காடும் அன்றுமுதல் திருவானைக்கா எனப் பெயர் பெற்றது. இது நிற்க.

இறைவன் வீற்றிருக்கும் அவ்வெண்நாவல் மரத்தில் சிலந்தி ஒன்றும் வாழ்ந்திருந்தது அது சிவன் திருமுடியில், யானை சூட்டிய மலர்களையும், மரம் செடிகளின் இலைகளையும் பார்த்தது. யானை அன்பால் சூட்டியன அவை என்பதை அது அறியாது. காற்றால் அலைப்புண்டு உதிர்ந்த காட்டுச் சருகுகள் என்றே அவற்றைக் கருதிற்று. இறைவன் திருமுடியில் சருகுகள் உதிர்வதைக் கண்டு, அதன் அன்புள்ளம் கலங்கிற்று. உடனே, அவ்விறைவன் திருமுடிக்கு மேலே, தன் வாய் நூலால் வலை பின்னி, விதானம் அமைத்தது.

மறுநாள், வழக்கம்போல் வழிபாடாற்ற வந்த வெள்ளை யானை, அச்சிலந்தி வலையைப் பார்த்தது. இறைவன் திருமுடிமேல் எச்சில் நூலால் வலை இயற்றி இருப்பது தூய்மைக் குறைபாடாம் என்று கருதித் தன் துதிக்கையால் அவ்வலையை அழித்துவிட்டு, வழிபாட்டையும் முடித்துக்கொண்டு போய் விட்டது. அதன் பின்னர் ஆங்கு வந்த சிலந்தி வலை அழிந்து போயிருப்பதைப் பார்த்து வருந்திற்று. ஆயினும் அது அழிந்தது எவ்வாறு என்பதை அறியாதே, மீண்டும் வலை பின்னி வைத்துச் சென்றது.

இவ்வாறு, சிலந்தி வலை பின்னுவதும், யானை அவ்வலையை அழித்து இறைவன் திருமுடியில் காட்டு மலர்களையும் இலைகளையும் இட்டுச் செல்வதும் தொடர்ந்து நடைபெற்றன. ஆனால், சிலந்திதான் வலை பின்னுகிறது; அது அதன் அன்பின் அறிகுறி என்பதை யானை அறியாது; யானைதான் வலையை

அறுத்துவிட்டுக் காட்டுச் சருகுகளை இட்டுச் செல்கிறது; அது அதன் வழிபாட்டின் விளைவு என்பதைச் சிலந்தி அறியாது. ஒரு நாள் யானை வழிபாடாற்ற வருங்கால், ஆங்கிருந்த சிலந்தி உண்மையை அறிந்துகொண்டது. சிலந்திக்கு அடங்காச் சினம் பிறந்துவிட்டது; இத்தனை நாட்களாக, இதைச் செய்து வந்தது இந்த யானைதானே? இனியும் இதை உயிரோடு விட்டு வைப்பது கூடாது என்று துணிந்தது. உடனே மரத்தை விட்டு இறங்கி, யானைத் துதிக்கையின் துளையுட் புகுந்து சென்று கடித்துவிட்டது. அது பொறுக்கமாட்டாத யானை, துன்பத்தால் துடித்து வீழ்ந்து இறந்தது. வீழ்ந்த யானை துன்ப மிகுதியால், தன் துதிக்கையைத் தரையில் ஓங்கி ஓங்கி அறைந்ததால், அதன் உட்புகுந்த சிலந்தியும் உயிர் துறந்தது.

ஈருயிர்களின் இறவாப் பேரன்பைக் கண்ட இறைவன், வெள்ளானைக்கு வேண்டும் வரங்களை வழங்கிவிட்டுச், சிலந்திக்குச் சோழர் குலத்தில் பிறந்து, பேரரசு செலுத்தும் பெரு வாழ்வை அளித்தான்.

இஃது இவ்வாருகச், சோணாட்டில், சுபதேவன் என்பான் அரசோச்சியிருந்தான். அவனும், அவன் மனைவி கமலவதி என்பவளும், தில்லையில் திருக்கூத்தாடும் இறைவன்பால் குறையா அன்புடையராவர். அவர்கள் தமக்கு மகப் பேறில்லா மாசினைப் போக்குமாறு, அம்மன்ருடியை மன்ருடி வேண்டிக்கொண்டனர். அவன் திருவருளால் கமலவதி இறுதியில் கருவுற்ருள். அவள் வயிற்றில் மகவாய்ப் பிறக்குமாறு சிலந்தியின் ஆருயிர்க்கு அப்பரமன் ஆணையிட்டான். அவ்வாறே, சிலந்தி, சோழர் குல மாதேவியின் வயிற்றில் மகவாய் வந்து தோன்றிற்று.

கருப்பநாள் நிரம்ப மகப்பெறும் நாழிகையும் நெருங்கி விட்டது. அக்காலை, காலத்தின் பயனறியும் கணக்காளர், பிள்ளை ஒரு நாழிகை கழித்துப் பிறக்குமேல் பேரரசனுய்ப் பெருமை பெறுவான் என்றனர். அது கேட்ட அத்தாய், தன் மகன் தன்னேரில்லாத் தனியரசு செலுத்த வேண்டும் என்ற

தணியா வேட்கை உடையவளாய், தன் உயிர் போவதையும் பொருட்படுத்தாது, பிள்ளைப் பேற்றினை ஒரு நாழிகை கழித்துப் போட்டு மகவீன்று, அம்மகிழ்ச்சி நிறை மனத்தோடே மறைந்து விட்டாள்.

பிறந்த செல்வனுக்குச், சுபதேவன், செங்கண்ணன் எனச் சிறப்புப் பெயரிட்டுச் சீராட்டி வளர்த்தான். கற்கவேண்டிய கலைகளையெல்லாம் கற்றுக் காளைப் பருவம் பெற்றான், கோச்செங்கணன். சுபதேவன், நாடாள் உரிமையை அவன்பால் ஒப்படைத்துவிட்டுக் காடு சென்று, கடுந்தவம் பலபுரிந்து இறுதியில் கண்ணுதலான் கழலடி சேர்ந்தான்.

கோச்செங்கணன், அரியணை அமர்ந்து, தன் கொற்றமும் வெற்றியும் விளங்க ஆட்சி புரிந்து வந்தான். நாடு நலம் பெற்றுவிட்டது; இனி அதற்கு நலிவு இல்லை என்ற நிலை பெற்றுவிட்டதும், தன் கருத்தை இறைவன் திருப்பணியில் போக்கினான்; சோணாட்டில் இறைவன் எங்கெல்லாம் இடம் பெற்றுள்ளானோ அங்கெல்லாம் திருக்கோயில் அமைக்கும் அரிய தொண்டினை மேற்கொண்டான். தன் பழம் பிறப்பின் பெருமையை அறிந்து கொண்டமையால், அத்திருவானைக் காப் பெருமானுக்குக் கோயில் எடுத்தும், அக்கோயில் உள்ளே வெண்ணாவல் வளர்த்தும் வழிபாடாற்றினான். அரசன் கருத்தறிந்த அவன் அமைச்சர்களும், சோணாடு முழுவதும், சிவன் கோயில்களை அமைத்து, அவற்றில் குறைவற நிகழ வேண்டிய வழிபாட்டிற்கு வேண்டிய அமுதுபடி முதலான நிபந்தங்களையும் உண்டாக்கி வைத்தனர்.

இறைவனுக்குத் திருக்கோயில் அமைக்கும் அரிய பணி மேற்கொண்ட கோச்செங்கணன், அப்பணி குறைவற நிறைவேறிய பின்னர், இறைவன் உறையும் பெரிய கோயிலாகிய தில்லை மாநகர் சென்று சேர்ந்தான்; ஆங்கு ஆடும் பெருமானை அன்புருக வழிபட்டிருந்த வேந்தன், அக்கோயிலில் வழிபாடு செய்யும் அந்தணர்க்கு வாழிடம் நன்கு வாய்க்காமை கண்டு, அவர்க்கெனப் பெரிய மாளிகைகள் பல அமைத்துத் தந்தான்.

இவ்வாறு அன்பு நெறியிலும், அரசியல் முறையிலும் சிறந்தோனாய், விளங்கிய செங்கணான், இறுதியில் இறைவன் திருவடி நிழல் அடைந்து இறவாப் பெருநிலை பெற்று விட்டான். இதுவே சேக்கிழார் கூறும் செங்கணான் வரலாறு.

"வெண்நாவல் இறைக்கொளிநூல் பந்தர் செய்த
வியன்சிலம்பி அதுஅழிந்த வெள்ளா னைக்கை
உள்நாடிக் கடித்தஉடல் ஒழியச், சோழன்
உயர்குலத்துச் சுபதேவன் கமலத்து ஓங்கும்
பெண்ணாகி யவள்வயிற்றில் வைகிச் செங்கண்
பெருமானாய்ப், பெருங்கோயில் பலவும் கட்டிக்
கண்ணார்வித் துயர்தில்லை மறையவர்க்கும் உறையுள்
கனகமய மாக்கிஅருள் கைக்கொண் டாரே"

என்ற ஆசிரியர் உமாபதியார் ஆக்கிய திருத்தொண்டர் புராண சாரச் செய்யுள், அவ்வரலாற்றைச் சுருங்க உரைப்பதும் காண்க.

அம்பர், வைகல், நன்னிலம் முதலான இடங்களில் கோயில் எடுத்தவன் கோச்செங்கணானே என்று, சுந்தரரும், சம்பந்தரும் பாடிய தேவாரப் பாடல்களும் சான்று பகர்கின்றன.

இவ்வாறு, சுத்தசைவனாய், சிவத்தொண்டு புரிந்தவனாய், சைவசமய ஆசிரியர்களால் பாராட்டப்பெற்றவனாய செங்கணான், வைணவப் பெரியார்களாய், திருமங்கை ஆழ்வாராலும், பொய்கையாழ்வாராலும் பாராட்டப் பெற்றிருப்பது, செங்கணானின் எம்மதமும் சம்மதம் என்ற பரந்த சமரச சமய உள்ளத்தை உணர்த்துவதாகும். 'உலகம் ஆண்டதென்னாடன், குடகொங்கன், சோழன், 'தென் தமிழன்' வடபுலக்கோன்,' 'கழல் மன்னர் மணிமுடிமேல் காகம் ஏறத், தெய்வாள் வலம் கொண்ட சோழன்,' 'விறல் மன்னர் திறல் அழிய வெம்மா உய்த்த செங்கணான்,' 'படை மன்னர் உடல்

துணியப் பரிமா உய்த்த தேராளன்,' என அவன் வெற்றிகளை விளங்கப் பாடிய திருமங்கை ஆழ்வார், 'இருக்கு இலங்கு திருமொழிவாய் எண்தோள். ஈசற்கு எழில் மாடம் எழுபது செய்து உலகம் ஆண்ட திருக்குலத்து வளச் சோழன்' என அவன் சிவத் தொண்டினையும் பாராட்டியிருப்பது, அவனுக்குச் சிறப்பன்றோ?

# 3. போர்ப் படைத் தலைவர்கள்

கழுமலப் போரில் கலந்துகொண்ட இருதிறத்துப் படைத் தலைவர்கள் எழுவராவர். அத்தி, ஏற்றை, கங்கன், கட்டி, நன்னன், பழையன், புன்றுறை என்பன அவர்தம் பெயர்கள். இவருள் .பழையன் ஒருவனே சோழர் படைத் தலைவனாய்ப் பணியாற்றினன். ஏனைய அறுவரும் சேரர்படை முதல்வர்களே. சேரர் படைத் தலைவர் அறுவரே என்றாலும், அவருள் வரலாறு உணரத்தக்க சிறப்புடையான் கட்டி ஒருவனே. எஞ்சிய ஐவர் குறித்து, அவர்தம் பெயரும், அவர்கள் கழுமலப்போரில் கலந்துகொண்டார்கள் என்ற செய்தியும் தவிர, வேறு எதையும் அறிந்துகொள்வதற்கில்லை. அத்தி, நன்னன் இருவரைக் குறித்து மட்டும் மேலும் சில கூறலாம்.

அத்தி என்பது சேர இனத்தவரைக் குறிக்க வழங்கும் பெயர்களுள் ஒன்று. அத்தி எனும் அப் பெயருடையான் ஒருவன், சோழன் கரிகாற் பெருவளத்தானின் செல்வக் குமரியும், சிறந்த புலமையுடையாரும், புலவர்களாலும் புகழத் தக்க பெருமை யுடையாருமாகிய ஆதிமந்தி என்பாரை மணந்திருந்தான். ஒருகால், காவிரியில் புது வெள்ளம் வரக் கண்டு சோணாட்டு மக்கள் மகிழ்ந்து கொண்டாடும் விழாவில் கலந்துகொண்டு புனலாடினன் அவன். அவனைக் காவிரி வெள்ளம் அடித்துக்கொண்டு போய்விட்டது. ஆதிமந்தி அவனைத் தேடித்தேடி அலைந்து, ஆருத்துயருற்றாள். எங்கும்

அவன் அகப்பட்டிலன். இறுதியில், காவிரி கடலோடு கலக்குமிடமாகிய கழார் நகரில் வாழ்ந்திருந்த மருதி என்பவள், அவனைக் காப்பாற்றிக் கரை சேர்த்தாள். ஆனல் அம்முயற்சியில், அவள் தன் உயிரை இழந்தாள். அவனுக்குரிய அத்தி என்ற பெயரையே இவனும் பூண்டிருந்தானுதலின், இவன் சேரர் இனத்தைச் சேர்ந்தவனுவன் என்பதே, அத்தி குறித்து அறியத் தக்கதாம்.

நன்னன் என்ற பெயர் நல்லோன் ஒருவனுக்குரிய பெயராகவும், தீயோன் ஒருவனுக்குரிய பெயராகவும் சங்க நூல்களில் வழங்கப்பெற்றுளது. தொண்டை நாட்டின் இருபத்து நான்கு கோட்டங்களுள் பல்குன்றக் கோட்டம் என்ற பகுதியில், மலையிடை மாநகராகிய செங்கண்மா என்ற சிறந்த ஊரை அரசிருக்கையாகக் கொண்டு, வள்ளல் பெருந்தகையாய், இரணிய முட்டத்துப் பெருங்குன்றூர்ப் பெருங் கௌசிகன் என்ற பெயர் மிக்க புலவரால், மலைபடுகடாம் என்ற பாட்டில் வைத்துப் பாராட்டப் பெற்றவனுன நன்னன் சேய் நன்னன் என்பான் ஒருவன். கொண்கான நாட்டில் வேளிர்க்குரிய விழுநிதி வைத்துக் காக்கப்பெற்று, அதனுல் பற்பல போர்களுக்கு நிலைக்களமாகிவிட்ட பாழி என்ற அரண்மிக்க பேரூரில் வாழ்ந்து, தனக்குரிய மாவின் கனியைத் தின்றுவிட்டாள் என்பதற்காக, ஒரு கன்னிப் பெண்ணைக் கொன்று, அதனுல் "பெண் கொலை புரிந்த நன்னன்" எனப், பெரும் புலவர் பரணரால் பழிக்கப்பட்டவனுன நன்னன் வேண்மான் இரண்டாமவன். அவ்விருவர்க்குரிய நன்னன் என்ற பெயரையே இவனும் பெற்றிருந்தான். பின்னர்க் கூறிய நன்னன் வேண்மான், நன்னன் உதியன் எனவும் அழைக்கப்பெறுவான். உதியன் என்ற பெயர், சேரரைக் குறிக்கவரும் பெயர்களுள் ஒன்று. ஆகவே, அந்நன்னன் ஒருவகையில் சேரர் இனத்தைச் சேர்ந்தவன் என்பது வெளிப்படுவதால், நன்னன் என்ற இச்சேரர் படைத் தலைவனும் சேரர் இனத்தைச் சேர்ந்தவனே என்பது ஒன்றே, நன்னனைக் குறித்து அறியத் தக்கதாம்.

கட்டி ஒரு வடநாட்டுத் தலைவன். தமிழ் நாட்டின் வட வெல்லையாகிய வேங்கட மலைக்கு அப்பால், வடுகு மொழி என்ற வேற்று மொழி பேசும் வடுகர் என்ற மக்கள் இனத் தவர் வாழும் நாட்டில், நல்ல வளம் மிக்க ஒரு சிறு நிலப் பகுதியை ஆண்டிருந்தவன் இக்கட்டி. வேற்படைத் துணை யால் வெற்றிபல பெற்றவன்.

தமிழகத்தின் எல்லைக்கண் வாழ்ந்திருந்தமையால், கட்டி தமிழ்நாட்டின் வளத்தை நன்கு அறிந்திருந்தான். வறண்ட வடநாட்டு வாழ்வை வெறுத்து வளங் கொழிக்கும் தமிழ கத்து வாழ்வில் வேட்கை கொண்டான்; தமிழகத்துள்ளும், 'சோறுடைத்து' என்ற சிறப்பு வாய்ந்த சோணாட்டு வளம் அவனைப் பெரிதும் கவர்ந்தது. அதனால், அச்சோணாட்டைக் கைப்பற்றி ஆள விரும்பினான். அக்காலை, சோணாட்டைத் தித்தன் வெளியன் என்பவன், உறந்தைமா நகரைத் தலை நகராகக் கொண்டு ஆண்டிருந்தான். தித்தன் எனவும்; தித்தன் வெளியன் எனவும் அழைக்கப்பெறும் அவன், சிறந்த கொடை வள்ளலும், பெரிய போர் வீரனுமாவான். அரிய போர் செய்யும் அவன் ஆற்றலையும், அவனுக்குத் துணை செய் யும் பெரிய படையையும், சினம் மிகுந்து போர் செய்யும் அதன் சிறப்பினையும் புலவர்கள் பலர் பாராட்டியுள்ளார்கள். பெரிய படையும் பேராண்மையும் உடைய அவன், தன் தலை நகராம் உறந்தையைத் தலைசிறந்த அரண் உடையதாக ஆக்கியிருந்தான். நாற்புறமும் நீண்டு உயர்ந்த மதில்கள் இடம்பெற, அவற்றைச் சூழ, சிறுசிறு மலைகளை இடை இடையே கொண்ட அடர்ந்த காவற்காடு வளர்க்கப்பட் டிருந்தது; பாய்ந்து வரும் பகைவர் படைக்கு இடையூறு பல விளைத்து, புறங்காட்டி ஓடப்பண்ணும் அதன் பெருமையும் புலவர்களால் பாராட்டப்பெற்றுள்ளது.*

---

* "போர் அரும் தித்தன்" —புறநானூறு : 80.

"சினங்கெழு தானை தித்தன் வெளியன்"
—அகநானூறு : 152.

உறையூர் அரசியல் உரிமையைக் கைப்பற்றக் கருதிய கட்டி, அவ்வுறந்தையை ஆளும் தித்தனது பெருமையை அறிந்தான். அவ்வளவு பெரும்படையும் பேராண்மையும் உடைய அவனைத் தனியே சென்று தாக்குதல் இயலாது; தக்க ஒருவனின் துணையோடே சென்று தாக்குதல் வேண்டும் என்று எண்ணினான். அவ்வாறு எண்ணியவன், தனக்கேற்ற துணைவனைத் தேடிக் காண்பதில் சிறிதுகாலம் தாழ்த்த வேண்டியதாயிற்று.

கட்டியின் நாட்டிற்கு அண்மையில் உள்ள நாட்டில் பாணன் என்பானொருவன் அரசாண்டிருந்தான். அந்நாடும் கட்டியின் நாட்டைப்போலவே நலம் பல பெற்று விளங்கிற்று. கட்டியைப் போலவே பாணனும் பெருவலியுடையனாய் விளங்கினான்; பெரிய வேற்படையின் துணையையும் பெற்றிருந்தான். இவை அனைத்திற்கும் மேலாக, மற்போரிலும் வல்லனாய் வாழ்ந்தான். இவ்வாறு படைவலியும் உடல் வலியும் பெற்றிருந்தமையால் பகைவர் நாட்டுப் பசு மந்தைகளைக் கவர்ந்து வருவதில் கருத்தினைச் செலுத்தியிருந்தான். ஆனிரை மேய்ந்து கொண்டிருக்கும் இடம் மிகச் சேய்மைக் கண் இருப்பினும் தயங்கான். மீண்டுவர நாள் பல ஆகும் என அறிந்து, ஆங்கு வேண்டும் உணவை மூங்கில் குழாய் களில் இட்டுச் செல்வன். பரல்கற்கள் நிறைந்த படுவழிகளைக் கடக்கக் காலில் செருப்பணிந்து செல்வன்; பகைவர் நாட்டுள் புகுந்ததும், ஆனிரைகளைக் காத்து நிற்கும் அந்நாட்டுப் படைவீரர் தங்கியிருக்கும் காட்டரண்களைத் தாக்குவதற்கேற்ற காலத்தை எதிர் நோக்கிக் காத்திருப்பன். தக்க சமயம் வாய்த்ததும் சிறிதும் தயங்காது வெளிப்பட்டுத் தாக்கி, அவரைத் துரத்தி விட்டு, ஆங்குள்ள ஆக்களையும், ஆனேறுகளையும் ஓட்டிக்கொண்டு வந்து சேர்வன். தன் நாடு

---

"நொச்சிவேலித் தித்தன் உறந்தை
கல்முதிர் புறங்காட்டன்ன
பல் முட்டு." —அகநானூறு ; 122.

வந்து சேர்ந்தவுடனே, வெற்றிக்குத் துணைபுரிந்த வேல் வீரர்களுக்கு விருந்தளித்துச் சிறப்புச் செய்வன். அவனிடம் இவ்வளவு ஆற்றலும் அறிவும் இருந்தமையால், அவன் வாழ்நாளில் ஒருமுறை கூடப் போரில் தோற்றுப் புறங் காட்டியது இல்லை.*

பாணன் பெருமைகளைக் கட்டி அறிந்திருந்தான். அதனால் அவன் துணையை நாடினான். கட்டியின் வேண்டுகோளுக்குப் பாணன் இசைந்தமைக்கு வேறு ஒரு காரணமும் இருந்தது. பாணன் ஒரு பெரிய மல் வீரன். தன் மல்வீரத்தைத் தமிழகத்தில் விளக்கி வருதல் வேண்டும் என்ற வேட்கையுடையவன் அவன். இப்படையெடுப்பு அதற்கும் துணை புரியும் என்று நம்பினான். அதற்கு ஏற்ற வாய்ப்பினைத் தேடித் தருவதாகக் கட்டியும் வாக்களித்திருந்தான். ஆக, இருவரும் ஒருவர்க்கொருவர் துணைபுரியவும், அதே நிலையில் தத்தம் விருப்பங்களை நிறைவேற்றிக் கொள்ளவும் விரும்பித் தமிழ்நாடு நோக்கிப் புறப்பட்டனர்.

வடவர் படை, வேங்கடமலையைக் கடந்து, பொன்முகரி, பாலாறு முதலாம் ஆறுகள் பாயும் தொண்டை நாட்டையும், பெண்ணையாறு பாயும் மலையமா நாட்டையும் கடந்து சோணாடு புகுந்தது. உறையூர்க் கோட்டையை விரைந்து

---

*"வடாஅது
நல்வேல் பாணன் நல்நாடு" —அகநானூறு : 325.

"கல்பொரு மெலியாப் பாடின்நோன் அடியன்,
அல்கு வன்சுரைப் பெய்த வல்சியன்,
இகந்தன ஆயினும், இடம்பார்த்துப் பகைவர்
ஓம்பினர் உறையும் கூழ்கெழு குறும்பில்
குவைஇமில் விடைய வேற்றுஆ ஒய்யும்
கனைஇரும் சுருணைக் கனிகாழ் நெடுவேல்
விழவு அயர்ந்தன்ன கொழும்பல் திற்றி
எழாஅப் பாணன் நன்னாடு"— அகநானூறு : 113.

கைப்பற்றிக்கொள்ள வேண்டும் என்று கட்டி விரும்பினும், உடன் வந்திருக்கும் பாணன், பகைவர் சோர்ந்திருக்கும் காலம் பார்த்தே பாய்ந்து தாக்குதல் வேண்டும் என்ற போர் முறை அறிந்தவனாதலின், இருவரும் உறந்தையைச் சூழ்ந் திருந்த காவற்காட்டில் சின்னாள் காத்திருக்க வேண்டிய தாயிற்று.

தித்தனைத் தாக்கி வெல்ல, ஏற்ற காலத்தை எதிர் நோக்கிக் காத்திருக்கக் காத்திருக்கப் படையெடுப்பு முயற்சி யைக் கைவிட்டுப் போவதே நன்று என்ற நினைப்பு இருவர் உள்ளத்திலும், தோன்றி வலுப்படத் தொடங்கிற்று.

ஒவ்வொரு நாள் காலையிலும், இசைவல்ல பாணர்களும், இன் தமிழ்ப் புலவர்களும், போர் வல்ல வீரர்களும், வேறு பலரும் உறையூர்க் கோட்டைக்குள்ளே வரிசை வரிசையாக நுழைவதையும், சிறிது நாழிகைக்கெல்லாம், அரசன் அரியணை அமர்ந்த அரசியல் பணிகளை ஏற்றுக் கொள்வதை அறிவிக்கும் முரசொலியும், சங்கொலியும் ஒன்றையொன்று முந்திக்கொண்டு முழங்குவதையும், உடனே உள்ளே புகுந்த வர்கள் ஆங்குத் தித்தன் அளித்த பரிசுப் பொருள்களாய, யானைமீதும், குதிரைமீதும், தேர்மீதும் அமர்ந்து வெளிப் படுவதையும், அவர்வாய், வாரி வழங்கும் அவன் வள்ளன் மையை வாயார வாழ்த்துவதையும் காணலாயினர். வந்த சில நாட்களுக்கெல்லாம், உறந்தை நாடு வற்றாவளம் உடையது; வெண்ணெல் வயல்களை நிறையக் கொண்டது; ஆகவே, முற்றுகை எவ்வளவு நாள் நீடினும் நின்று வருந்தாது என்பதை அறிந்துகொண்டார்கள்; உறையூர்க் கோட்டை யின் உறுதிப்பாட்டினை நேரில் பார்த்துவிட்டார்கள். அவ் விரண்டுமே, அவர்கள் ஊக்கத்தை ஓரளவு நிலைகுலையச் செய்திருந்தன. அந்நிலையில், தித்தனின் இந்நாளோலக்கச் சிறப்பு அவர் நினைப்பை அழிக்கத் தொடங்கிவிட்டது; மக்களால் இவ்வளவு மதிக்கப்படும் ஒரு மன்னனை வெல்வது அவ்வளவு எளிதில் இயலாதே. அவனுக்கு ஒரு ஊறு நேர்ந்

தால், மக்கள் தம் உயிரையும் மதியாது அவனைக் காக்க முன் வந்துவிடுவரே. ஆகவே, இவனை எதிர்க்க வேண்டும் என்ற எண்ணத்தை விட்டுவிடுவதே நன்று என்று துணிந்தனர். அவ்வளவே, அத்தனை நாட்களாகக் காவற்காட்டில் பாடிக் கொண்டிருந்த பெரும்படையை மறுநாட்காலை பார்க்க முடியவில்லை. வெற்றி ஆர்வத்தோடு சோணாடு புகுந்த பெரும்படை, வெற்றாரவாரம் செய்துகொண்டே சேரநாடு நோக்கிச் சென்றுவிட்டது. போரிட வந்த கட்டி, போரிடா மலே புறமுதுகு காட்டி விட்டான்.*

போர் புரியாமலே புறமுதுகு காட்ட நேர்ந்ததே என்ற நினைப்பு நெஞ்சை வருத்தச் சேரநாடு நோக்கிச் சென்று கொண்டிருந்த கட்டியை, அந்நாட்டிலிருந்து வந்த நல்ல செய்தி ஒன்று வரவேற்றது. சேரநாட்டை அப்போது கணைக்கால் இரும்பொறை என்ற சிறந்த வீரன் ஒருவன் ஆண்டுகொண்டிருந்தான். அவனுக்கு சோணாட்டாட்சியைக் கைப்பற்றிக்கொள்ளவேண்டும் என்ற கருத்து இருந்தது. அதற்காகவே, இருநாடுகளுக்கும் இடைப்பட்ட இடமாகிய கழுமலம் என்ற நகரில் பெரிய கோட்டை ஒன்று அமைத்து, படைத்தலைவர் பலர் இருந்து நடத்திச் செல்லக்கூடிய பெரிய படையோடு அதில் காத்திருக்கிறான் என்பதை அறிந்தான். உடனே அவன் நட்பையும் நன்மதிப்பையும் பெற்றுவிட்டால் தன் நினைப்பு நிறைவேறிவிடும் என்று கருதினான். அவன் நட்பைப் பெறப் பெரிதும் விரும்பினான்.

அதற்கேற்ற சூழ்நிலையும் அவனுக்கு வாய்த்தது. அக் கணையனிடம், ஆரியப் பொருநன் என்ற மற்றொரு வட

---

*"வலிமிகு முன்பின் பாணனொடு, மலிதார்த்
தித்தன் வெளியன் உறந்தை நாளவைப்
பாடின் தெண்கிணைப் பாடுகேட்டு அஞ்சிப்
போர்அடு தானைக் கட்டி
பொராஅது ஓடிய ஆர்ப்பு" —அகம்: 226.

நாட்டு மல்வீரன் இருப்பதாகவும், அவனைப் பேணிப் புரக்கும் அக்கணையன், 'தன் மல்வீரனை எவராலும் வெல்ல முடியாது' என வீம்பு பேசித் திரிவதாகவும் அறிந்தான். அவனுக்கு ஓர் எண்ணம் உண்டாயிற்று. தன் உடன் வரும் பாணனைக் கொண்டு அவ்வாரிய மல்லனை வென்றுவிட்டால், அவன் நண்பனாகிய கணையனுக்கு, இப்பாணன் நண்பனாகிய இக் கட்டிமீது மதிப்பு ஏற்படும்; அதை வைத்துக்கொண்டு அவன் படைத்துணை பெற்று, தன் கருத்தை நிறைவேற்றிக் கொள்ளலாம் என்று எண்ணினான். தன் மற்போர்த் திறத்தை விளக்கமுறச் செய்யவேண்டும் என்ற பாணன் வேட்கையும் அதனால் நிறைவேறும் என்று நினைத்தான்.

உடனே, கட்டியும், பாணனும் கழுமலநகர் புகுந்து கணையனைக் கண்டனர். கட்டி தன் நண்பன் பாணனின் மற்போர்ப் பெருமையைப் பாராட்டினான். கணையன் தன் நண்பன் ஆரியப் பொருநனின், அரிய திறத்தை அவனுக்குக் கூறினான். இருவரும், இவ்வாறு வீணே புகழ்ந்துகொள்வதைக் காட்டிலும், எவர் ஆற்றல் சிறந்தது என்பதை நேரில் பார்த்து அறிந்துகொள்வதே நன்று என்ற முடிவுக்கு வந்தனர். உடனே இருவரும் தம் நண்பர்களோடு மற்போர்க் களம் புகுந்தனர்.

பாணனும், ஆரியப் பொருநனும் மேடை புகுந்தனர். போர் தொடங்கிவிட்டது. கட்டியும் கணையனும், கண் இமையாது, கவலையோடு கண்டு நின்றனர். போர் நெடும் பொழுது நடைபெற்றது. இறுதியில் பாணன், ஆரியப் பொருநன் தோள்களைத் தன் மார்போடு தழுவி இறுகப் பிடித்துக்கொண்டான். பாணன் பிடித்திருக்கும் பிடியிலிருந்து தன்னை விடுவித்துக்கொள்ளும்பொருட்டு, பொருநன் தன் ஆற்றல் முழுவதையும் காட்டிச் சமர் புரிந்தான். ஆனால், பற்றிய பிடியினைப் பாணன் விட்டிலன். அதனால், பாணன் பிடிக்குள்ளேயே பொருநன் தோள் இரண்டும்

கிடக்க, அவன் உடல் மட்டும் தனித்து வெளிப்பட்டு வீழ்ந்தது. அந்தோ! ஆரியப் பொருநன் உடல் அழிந்தது; அவன் உயிர் பிரிந்தது.*

வெல்ல வல்லார் இல்லை என வீறு பேசிய நண்பன் மறைவு கண்டு மன்னன் மனம் கலங்கினன். வந்தோன் நண்பன் வெல்ல, வேந்தன் நண்பன் உயிரிழப்பதா என்று எண்ணி நாணிற்று அவன் நல் உள்ளம். கணையன் ஒரு சிறந்த வீரன். சிறந்த வீரனை மதிக்கும் உயர்ந்த உள்ளம் உடையவன். அதனால், தன் நண்பன் உயிர் போக்கியவன் இப் பாணன்; அவன் உடன் வந்தவன் இக்கட்டி என அவர்மீது சினம் கொள்ளாது, என்னால் மதிக்கப் பெற்ற ஒரு மாபெரும் மல்வீரனை வெல்லும் பேராற்றல் பெற்றவன் இப்பாணன்; இப்பாணனைத் தன் நண்பனாகப் பெற்ற பெருமையுடையவன் இக்கட்டி என அவர்களை மதித்து வரவேற்றுச் சிறப்புச் செய்தான்.

கணைக்கால் இரும்பொறையின் அன்பைப் பெற்ற கட்டி, தன் வரலாற்றையும் விருப்பத்தையும் அவனுக்கு அறிவித்தான். கட்டி விருப்பமும் தன் விருப்பம் போலவே சோணாட்டரசைக் கைப்பற்றுவதே என அறிந்தான் கணையன். மேலும் அக்கட்டி ஒரு பெரிய படையோடு வந்திருப்பதையும் பார்த்தான். அவனாலும், அவன் படையாலும் தன் கருத்தும்

* "பாணன்
மல்லடு மார்பின் வலியுற வருந்தி
எதிர்தலைக் கொண்ட ஆரியப் பொருநன்
நிறைத்திரள் முடிவுத்தோள் வையகத்து ஒழிந்த
திறன்வேறு கிடக்கை நோக்கி, நற்போர்க்
கணையன் நாணியாங்கு" —அகநானூறு : 386.

நிறைவேறும் என்று நம்பினுன். உடனே கழுமலக் கோட்டைக் காவலர்களாக விளங்கும், அத்தி, ஏற்றை, கங்கன், நன்னன், புன்துறை என்ற படைத் தலைவர்களோடு இவனையும் ஒன்றுபடுத்தி உயர்வு செய்தான். சேரர் படையில் சேர்ந்து பணியாற்றும் பேறு கட்டிக்குக் கிடைத்தது.

சேரநாட்டின் உட்புகுந்து, அச்சேரர்க்குரிய கழுமலக் கோட்டையைக் காத்துநின்ற படைத் தலைவர் அறுவரையும் வென்று, அவர் படைகள் ஆறினையும் அழித்து வெற்றி கண்ட சோழர் படைமுதலி பழையன் என்பவனுவன். சோழ நாட்டிற்கு வாழ்வும் வளமும் அளிப்பது காவிரியாறு. அக் காவிரியாற்றின் கரைக்கண் தோன்றிப் பெருமை பெற்ற பேரூர்கள் பல. அவற்றுள் ஒன்று போஓர் என ஒலிக்கப் பெறும் போரூர். ஆங்கு ஓடும் காவிரியின் ஆழத்தை அளந்து காணமுடியாது. ஓடக்கோலும் ஆழ்ந்துபோகும் அவ்வளவு ஆழம் உடையது அவ் வாறு. பெருகி ஓடும் அக்காவிரியாற்று நீரை அவ்வூர் மக்கள் நன்கு பயன்படுத்திக்கொண்டிருந்தனர். காவிரியாற்றிலிருந்து கால்வாய்கள் பல வெட்டி வைத்திருந் தார்கள்; எங்கு நோக்கினும் நீர் நிறைந்து ஓடும் மதகுகளே காட்சி தரும். இவ்வாறு காவிரியாற்றுப் புனலைப் பயன் கொண்டமையால், அவ்வூரைச் சூழ எங்கும் தென்னஞ் சோலைகளும் வாழைத் தோட்டங்களுமே காட்சி அளித்தன.

இத்தகைய வளமிக்க போரூரில் வாழ்ந்திருந்தான் பழையன். பழையன் ஒரு பெரிய வீரன்; பெரிய படைக்குத் தலைவனுமாவன். அவன் ஒரு சிறந்த வில்வீரன்; அவன் கை வில்லிலிருந்து அம்புகள் மழைத்தாரைகளென, மளமளவென வெளிப்பட்டு, பகைவர் படையைச் சிதறடிக்கும் சிறப்புடையன. வேல் ஏந்திப் போர் புரிவதிலும் அவன் வல்லவன், வலக்கையில் வேலும், இடக்கையில் பகைவர் ஏவும் படைக் கலங்களைத் தடுக்கும் தோலும் ஏந்திக் களம் புகுந்துவிட்டால் அவன் வெற்றி பெருது வீடு திரும்பான். அவன் வீசும் வேல், சிறிதும் குறிதவருது சென்று பாய்ந்து பகைவர் உயிரைப் பாழ்பண்ணும். அவ்வளவு சிறந்த போர்ப்பயிறசி பெற்றிருந்

தான் அவன். இவ்வாறு பெரிய வீரனாய் விளங்கிய அவன், பெரிய யானைப் படையொன்றையும் பெற்றிருந்தான்.*

பழையன், இவ்வாறு பெருவீரனாய், பெரும்படை பெற்றவனாய் விளங்குவதை, அப்போது சோணாட்டை ஆண்டுவந்த செங்கணான் அறிந்தான். கொங்கு நாட்டுக் காவலனாகிய கணைக்கால் இரும்பொறையை வென்று கைப்பற்ற வேண்டும், அவனுக்குரிய கழுமலக்கோட்டையைப் பாழ்செய்தல் வேண்டும், இருவரும் செயல்களால் சோழர்களின் வெற்றிப் புகழை விளங்கக் காட்டுதல் வேண்டும் என்ற ஆசையுடையவன் அச்செங்கணான். அவ்வாசை கொண்ட அவன், அதை முடிக்க வேண்டுமேல், பகைவனின் பெரிய படைகளையும், படைத்தலைவர் பலரையும் வெல்ல வல்ல வீரன் ஒருவனே தன் படைக்குத் தலைவனாய் அமைதல் வேண்டும் என்று உணர்ந்தான்! அதனால், போரூர் சென்று பழையனைத் தன் படைக்குத் தலைமை தாங்குமாறு வேண்டிக் கொண்டான். அவனும் அதற்கு இசைந்து, தன் யானைப் படையோடு வந்து சோழர் படைத் தலைமையை ஏற்றுக்கொண்டான்.§

---

* "வென்வேல்,
இழை அணி யானைச் சோழன் மறவன்
கழை அளந்து அறியாக் காவிரிப் படப்பைப்
புனல் மலி புதவின் போஓர் கிழவோன்
பழையன் ஓக்கிய வேல்போல்
பிழையல." —அகநானூறு : 326

"வென்வேல்
மாரி அம்பின், மழைத்தோல் பழையன்
காவிரி வைப்பின் போஓர்." —அகநானூறு : 186

"கொற்றச் சோழர், கொங்கர்ப் பணீஇயர்
வெண்கோட்டு யானைப் போஓர் கிழவோன்
பழையன் வேல்வாய்த்தன்ன, நின்
பிழையா நன்மொழி" —நற்றிணை : 10

# 4. போர் நிகழ்ச்சி

சேரமான் கணைக்கால் இரும்பொறை, நன்னன், ஏற்றை, அத்தி, கங்கன், கட்டி, புன்றுறை முதலாய படைத் தலைவர்களோடு கழுமல நகர்க்கோட்டையில் காத்திருந்தான். அக்கால அரசியல் சூழ்நிலையும் அவனுக்கு ஏற்றதாகவே அமைந்திருந்தது. அதுவே சோழன் செங்கணான் அவன்மீது போர் தொடுக்கக் காரணமும் ஆயிற்று.

சேர நாட்டிற்குக் கிழக்கிலும், சோணாட்டிற்கு மேற்கிலும், பாண்டி நாட்டிற்கு வடமேற்கிலும், அதாவது இம் மூன்று நாட்டு எல்லைகளும் ஒன்றுசேரும் இடத்தில், சிறுநிலப் பகுதியைத் தம் உடைமையாகக் கொண்டு கொங்கர் என்ற இனத்தவர் வாழ்ந்திருந்தனர். சேர, சோழ, பாண்டியர் களைப் போலவே அவர்களும் மறவர் மரபில் வந்தவராவர். அவர்கள் ஆனிரை ஓம்பும் தொழில் மேற்கொண்டிருந்தனர். கோவை மாவட்டத்தையும், சேலம் மாவட்டத்தின் தென் பகுதியையும் கொண்டு, கொங்கு நாடு என அழைக்கப்பெற்ற அக்கொங்கர் வாழ் நாடு, நீர்வளம் அற்ற வன்னிலமே வாய்ந்த மேட்டு நிலமாம். அதனால், கொங்கர், தம் ஆனிரை களுக்கு வேண்டிய தண்ணீரைப் பெறுவதற்காக, ஆங்காங்கே எண்ணிலாக் கிணறுகளைத் தோண்டி வைத்திருந்தனர். ஆனிரைகளை எத்திசையில் கொண்டு செல்ல விரும்பு கின்றனரோ, அத்திசையில் கொங்கர் சிலர், ஆனிரை செல் வதற்கு முன்பாகவே சென்று, கணிச்சி போன்ற கல் உடைக் கும் கருவிகளின் துணைகொண்டு, கற்களைத் தீப்பொறி சிதறு மாறு உடைத்து, சிறிது சிறிதாக அகழ்ந்து, ஆழ்ந்த கிணறு களைத் தோண்டி வைப்பர். அக்கிணறுகளும், மேல் நீரும் மிக்க நீரும் உடையவாகாமல், ஆழ் நீரும், அற்று அற்றுக் கசியும் குறை நீருமே உடையவாகும். அந்நீரை நீண்ட கயிறு

களில் சிறு முகவைகளைக் கட்டி இட்டு முகந்து ஆனிரை களுக்கு ஊட்டுவர்.[1]

ஆனிரை வளர்க்கும் அருந்தொழில் மேற்கொண்டு வாழ்ந்த கொங்கர், சிறந்த கொற்றம் உடையவராயும் விளங்கினர். சிறந்த வாட்போர் வீரராய் வாழ்ந்தனர். அரிய பெரிய கோட்டைகளையும் அழிக்கவல்ல பெரிய பெரிய குண்டுக் கற்களை வீசவல்ல கல்கால் கவணை என்ற கருவிகளை யும் அவர்கள் பெற்றிருந்தார்கள். கொங்கரின் இப்போர்ப் பண்பு, "ஒளிறுவாள் கொங்கர்", "ஆர் எயில் அலைத்த கல்கால்கவணை நார் அரி நறவின் கொங்கர்" எனப் புலவர் களால் பாராட்டப்பெற்றுள்ளன.

இவ்வாறு ஆனிரை ஓம்பும் தொழில் மேற்கொண்டு ஆற்றல்மிக்க மறவராய் வாழ்ந்த கொங்கர், அவ்வப்போது, தம் அண்டை நாடுகளாய சேர, சோழ, பாண்டிய நாடுகளுள் புகுந்து, அந்நாட்டு ஆனிரைகளைக் கைப்பற்றிவந்து, தம் ஆனிரைச் செல்வத்தை வளர்த்துக்கொள்ளும் வழக்கத்தை மேற்கொண்டிருந்தனர். அதனால், அச் சேர, சோழ, பாண்டியர் மூவருமே கொங்கரைத் தம் பகைக்குலத்தவராகக் கொண்டு, அவரை அழித்து ஓட்டுவதில் ஆர்வம் காட்டி வந்தனர். பல்யானைச் செல்கெழுகுட்டுவன் என்ற சேர மன்னன், அவரை வென்று, அவர் நாட்டைத் தன் நாட் டோடு இணைத்துக்கொண்டான்.[2] கிள்ளி வளவன் என்ற சோழர்குலப் பேரரசன், கொங்கரை வென்று புகழ்

---

1 "பொன்செய் கணிச்சித் திண்பிணி உடைத்துச்
சிரறுசில ஊறிய நீர்வாய்ப் பத்தல்
கயிறுகுறு முகவை மூயின மொய்க்கும்
ஆகெழு கொங்கர் நாடு." —பதிற்றுப் பத்து : 22

2 "ஆகெழு கொங்கர் நாடு அகப்படுத்த
வேல்கெழுதானை வெருவரு தோன்றல்!"
—பதிற்றுப் பத்து : 32

பெற்றான்.[1] பசும்பூண் பாண்டியன் என்பானும் கொங்கரை வென்று அவர் ஆட்சிக்குட்பட்ட நாடுகளைத் தனதாக்கிக் கொண்டான்.[2] இம்முடியுடை வேந்தர்களே அல்லாமல், குறுநிலத் தலைவர்கள் சிலரும் அவரைப் பணியவைப்பதில் பேரார்வம் காட்டியுள்ளனர். ஆய் அண்டிரன் என்ற வேளிர் குலத்தவன், அக்கொங்கரைக் குடகடல்வரை ஓட்டி வெற்றி பெற்றான்.[3]

சோழன் செங்கணான் சோணாட்டு அரியணையில் அமர்ந்திருக்கும் காலத்திலும், கொங்கர் சோணாட்டுள் புகுந்து கொள்ளையிட்டனர். அதனால் அவரை அழிக்க வேண்டும் என்ற ஆர்வம், செங்கணான் உள்ளத்தில் உருப்பெற்றது. அந்நினைப்பு வரப்பெற்றதும், கொங்கரின் படைப் பெருமையையும், அவரை அதற்கு முன் வென்றுள்ள வேந்தர்கள், அவரை வெல்ல மேற்கொண்ட போர் முறைகளையும் எண்ணிப் பார்த்தான். வென்ற வேந்தர்கள், வேற்படையில் சிறந்து விளங்குவதை, அவர்களின் வெற்றியைப் பாராட்டிய புலவர்கள், அவர்களின் வேற்படைகளையும் புகழ்ந்திருப்பதால் உணர்ந்தான். உடனே, அவ்வேற்படையில் சிறந்தான் ஒருவனையே கொங்கரை அழிக்கும் தன் படைக்குத் தலைவனாக ஆக்குதல் வேண்டும் என்று துணிந்தான். அதனால் வேற்படையில் சிறந்த போரூர்த் தலைவன் பழையனைப் படைத் தலைவனாகக் கொண்டான்.[4]

1 "கொங்குபுறம்பெற்ற கொற்ற வேந்தே!"
—புறநானூறு : 373

2 "கொங்கர் ஓட்டி
நாடுபல தந்த பசும்பூண் பாண்டியன்"
—அகநானூறு : 253

3 "கொங்கர்க்
குடகடல் ஓட்டிய ஞான்றைத்
தலைப்பெயர்த்திட்ட வேலினும்பலவே."
—புறநானூறு : 130

4 கொற்றச் சோழர் கொங்கர்ப் பணீஇயர்
வெண்கோட்டு யானைப் போஒர் கிழவோன்
பழையன் வேல்வாய்த்தன்ன" —நற்றிணை : 10

இவ்வாறு கொங்கரை வென்று அடக்குதற்கு வேண்டிய ஏற்பாடுகளைச் செங்கணன் செய்துகொண்டிருக்க, சேரன் கணைக்கால் இரும்பொறை, அக்கொங்கரைத் தன் படைத் துணைவராகக் கொண்டான். இச்செயல் செங்கணன் சினத்தை அதிகப்படுத்தி விட்டது. உடனே கழுமல நகர் நோக்கிச் சோழர் படை புறப்பட்டுவிட்டது. பழையன், சோழர் படைக்குத் தலைமை பூண்டதோடு, அவனுடைய வேழப் படையும், வேற் படையும், சோழர் படைக்குத் துணைப்படையாய் வந்தன.

கழுமல நகரை அடுத்திருந்த திருப்போர்ப்புறம் என்ற இடத்தில், இருதிறப் படைகளும் எதிர்த்துப் போரிட்டன. சோழர் படையில் பழையன் ஒருவனே களம் புகுந்தான். ஆனால், சேரர் படையிலோ, படைத்தலைவர் அறுவருமே பங்கு கொண்டனர். பழையன் வேழப்படையும், வேற்படையும் வீறுகொண்டு போரிட்டன. சேரர் படைக்குப் பெருஞ்சேதம் விளைந்தது. கொங்குப்படை அறவே அழிவுண்டது. களம் எங்கும் பிண மலைகளே காட்சி அளித்தன. பிணம் தின்ன வந்து பறக்கும் பருந்துக் கூட்டத்தின் மிகுதியால், களம் முழு தும் நிழல் படர்ந்தது. சேரர் படைவீரர் அறுவரையும் தனித் தனியே தாக்கிப் போரிட்டுத் திரிந்தான் பழையன். நன்னன் நிலை குலைந்து வீழ்ந்து இறந்தான். ஏற்றை எதிர்நிற்கமாட் டாது இறந்து ஒழிந்தான். அணி பல பூண்டு அமர்க்களம் புகுந்த அழகனாகிய அத்தியும் அழிந்தான். நிகர் அற்றவன், அணுகி நின்று போரிட எவரும் அஞ்சத்தக்க ஆற்றல் உடை யவன் எனப் பாராட்டப் பெற்ற கங்கனும் களத்தில் மாண் டான். வடநாடு விட்டுத் தென்னாட்டு அரசியல் வாழ்வை விரும்பி வந்த கட்டியும், வெட்டுண்டு வீழ்ந்தான். வில்வீர னாகிய புன்றுறையும் பொன்றினான்.

படைத் தலைவர் அறுவரும் இறந்துபடவே, சேரர் படை செய்வதறியாது சிதறி ஓடிற்று. பழையன், ஓடும் படைகளை விடாது துரத்திச்சென்று கழுமலக் கோட்டையைப் பாழ் படுத்துவதில் முனைந்தான், படைத்தலைவர் போர்க்களம் புகக்,

கள நிகழ்ச்சிகளில் கருத்துடையனாய்க் கழுமலக் கோட்டைக்குள் தங்கியிருந்த கணையன், துணைவந்த கொங்குப் படை அழிவுற்றது; படைத் தலைவர் அறுவரும் இறந்துபட்டனர்; சோழர் படை, இறுதியில் கழுமலக் கோட்டையையும் சுற்றி வளைத்துக்கொண்டது என்ற செய்தியைக் கேட்டுக் கலக்கமும் கடுஞ்சினமும் கொண்டு களம் நோக்கிப் புறப்பட்டான். களம் புகுந்தவன், அத்தனை அழிவிற்கும் சோழர் படைத் தலைவன் பழையன் பேராற்றலே காரணமாம் என்பது அறியவே, அவன் சினமெல்லாம் பழையன்மீது பாய்ந்தது. அகத்துள அவ்வளவு படையையும் அவன்மீது ஏவினான். கொங்கரின் பெரிய படையையும், படைத்தலைவர் அறுவரையும் வென்ற போர் நிகழ்ச்சிகளால் களைத்திருக்கும் அந்நிலையில், சேரனும், அவன் படையும், புதிய பலத்தோடு வந்து தாக்கவே, பழையன் நிலை கலங்கிவிட்டான். அந்நிலையில் வந்து பாய்ந்த ஓர் அம்பு, அந்தோ! அவன் ஆருயிரைப் போக்கிவிட்டது. வெற்றி வீரன் களத்தில் வீழ்ந்துவிட்டான்.

செய்தி கேட்டான் செங்கணான். கொங்கரை வென்று அழிக்கக் கருதிய தன் கனவை நினைவாக்கிய பெருவீரன், சேரன் படைத் தலைவர் அறுவரை ஒருவனாகவே நின்று வென்ற உரம் உடையான் உயிரிழந்தான் என அறிந்து ஆற்றொணாத் துயர் கொண்டான். அத்துயர், மறுகணமே அடங்காச் சினமாய் மாறிற்று. பழையன் உயிர் போக்கிய கணையனைக் கட்டிப் பிடித்துச் சிறையில் அடைத்துச் சீரழியச் செய்வேன் என வஞ்சினம் உரைத்து வாளெடுத்துக் களம் புகுந்தான்.

சோழன் செங்கணானே களம் புகுந்துவிட்டான் என்பதறிந்த சேரனும் பெரிய தேர் ஏறிப் போர்க்களம் புகுந்தான். இருவர்க்கும் இடையே பெரும்போர் நிகழ்ந்தது. ஆனால், இறுதியில் செங்கணான் நினைத்தது நிகழ்ந்துவிட்டது. தன் படைவன்மையால், படைவலி இழந்துபோகத், தேரும் அழிந்துபோகத் தனித்து நின்ற கணைக்கால் இரும்பொறையின் கையில் விலங்கிட்டுக் கைப்பற்றிக்கொண்டான். கழுமலக்

கோட்டை சோழர் உடைமை ஆயிற்று. செங்கணானை, வெற்றி மாலை சூட்டிச் சிறப்பித்தார்கள்.

" நன்னன், ஏற்றை, நறும்பூண் அத்தி,
துன்னரும் கடும்திறல் கங்கன், கட்டி,
பொன்அணி வல்வில் புன்றுறை, என்றாங்கு
அன்று அவர் குழீஇய அளப்பரும் கட்டூர்ப
பருந்துபடப் பண்ணிப் பழையன் படடெனக்,
கண்டு அது நோனான் ஆகித், திண்தேர்க்
கணையன் அகப்படக் கழுமலம் தந்த
பிணையல் அம் கண்ணிப் பெரும்பூண் சென்னி."

—அகநானூறு : **44.**

சிறை பிடிக்கப்பட்ட சேரன் நிலையைக் காண்பதற்கு முன், கழுமலப் போர்க்களத்தின் கொடுமையினைச் சற்றுக் காண்போமாக.

# 5. களக் காட்சி

## தேர்க்குடையில் யானைத் தடக்கை

தேர்ப்படையை முன்னிறுத்தி முன்னேறி வந்தது யானைப் படை. பகைவர் படைக் கலங்கள் ஊடுருவ எளிதில் உருக்குலையா உறுதி வாய்ந்தது தேர்ப்படை. அவற்றிற்கு அழகளித்து நின்றன அவற்றின்மீது கட்டப்பெற்ற வெண் கொற்றக் குடைகள். தேர்ப்படைக்குச் சிறப்பளிப்பன அவற்றின் குடைகளே என்பதைப் பகைவர் படை வரிசையில் முன்னிற்கும் வாள்வீரர் கண்டுகொண்டனர். அவர் கையில், களம்பல கண்டு வென்று வீறுபெற்ற விழுச்சிறப்பால் விளக்கம் பெற்ற வாட்படை. உள்ளத்தில் மலையே எதிர்க்கினும் மலைக்காத உரமும் ஊக்கமும். இவற்றை உறுதுணையாக் கொண்டமையால் அவ்வாட்படைவீரர், எதிர்வரும் தேர்ப்படையின்

திண்மை கண்டு திகைப்புறாது முன்சென்று தாக்கினர். தேர்ப் படை அழிந்தது. தேர்ப்படை அழிவுகண்டும் வீரர்களின் உள்ளம் அமைதியுற்றிலது. அப்படைக்கு அழகளிக்கும் குடைகள்மீது அவர் சினம் சென்றது. குடைகளையும் கொடிகளையும் வெட்டித் துண்டாக்கி வெற்றி நகை நகைத்தனர். நிற்க.

முன்நின்ற தேர்ப்படை அழியவே, அதன் பின்னின்ற களிற்றுப்படை களம் நோக்கி விரைந்தது. வரிகளின் வனப்பு விளங்கும் நெற்றி, ஆடி அசையும் பருவுடல், தொங்கும் துதிக்கை ஆகியன சிறப்பளிக்க, வரிசைவரிசையாக முன்னேறி வந்தது வேழப்படை. தேர்ப்படைப் போரில் சற்றே தளர்ந்திருந்தும், வாள்வீரர், யானைப் படையின் வரவு கண்டு உளம் நடுங்கினாரல்லர். மாறாக, மேலும் ஊக்கம் கொண்டனர். அவை தொலையில் வருங்கால், அசைநடை யிட்டுவரும் அழகைக் கண்டுகளித்தனர்; அது சிறிது பொழுதே; அவை தம்மை நோக்கி விரைந்து முன்னேற முன்னேற, அவர் களிப்பு மாறக், கடுஞ்சினம் கொண்டனர். வந்த யானைப் படை வாள்வீரரைத் தம் வலம்கொண்டு தாக்கின. அதனால் அவர்களும் சிறிதே தளர்ந்தனர். ஆனால், பின்னிட்டாரல்லர். கை வாள்கள் அவர் வீரத்தை ஊக்கின. அதனால் ஓடாது உறுத்து நோக்கினர். அவற்றிற்கு ஆற்றல் அளிப்பன அவற்றின் துதிக்கைகளே என்பதைக் கண்டுகொண்டனர். உடனே தம் வாள்களை ஓச்சி, துதிக்கைகட்குக் குறிவைத்தனர். அவ்வளவே. தொங்கும் அக்கைகள் அற்று வீழ்ந்தன. அவ்வாறு வீழ்ந்த துதிக்கைகளுள் ஒன்று, ஆங்கு அதற்குமுன்பே அழிந்த, தேர்ப் படையின் சிதைந்த வெண் கொற்றக் குடையில் ஒரு பாதியும், மண்ணில் ஒரு பாதியுமாக வீழ்ந்தது.

முன்னணிப் படைகள் இரண்டின் முறிவு கண்டு, களத்தைக் காண முகம் சுளித்த மக்கள், வெண்கொற்றக் குடையில் வெட்டுண்ட துதிக்கை வீழ்ந்துகிடக்கும் காட்சி, வெண் மதியை வாயிற் கௌவிக்கிடக்கும் கரும் பாம்புக் காட்சி போல் தோன்றக்கண்டு, களக்கொடுமையைச் சிறிதே மறந்து களிப்புற்றனர்.

"இருநிலம் சேர்ந்த குடைக்கீழ் வரிநுதல்
ஆடியல் யானைத் தடக்கை, ஒளிறுவாள்
ஓடாமறவர் துணிப்பத், துணிந்தவை
கோடுகொள் ஒண்மதியை நக்கும் பாம்பு ஒக்குமே,
பாடார் இடிமுரசின் பாய்புனல் நீர்நாடன்
கூடாரை அட்ட களத்து."

—களவழி: 22

## யானைத் தலையில் தேர் உருளை:

சேரர் யானைப்படையால் சிறந்து விளங்கினர் என்றால், சோழர் தேர்ப்படையால் சிறந்தவர். அவர் தேர்ப்படை பகைவரும் பாராட்டும் பெருமை வாய்ந்தது. அத்தேர்ப் படைப் பெருமையால் ஒரு சோழ மன்னன், உருவப்பஃறேர் இளஞ்சேட் சென்னி எனப் பெயர் சூட்டிப் பாராட்டப் பெற்றுளான். சேரநாட்டு யானைப் படையின் பெருமை கண்ட சோழன் செங்கணான், அதைப் பாழாக்கத் தன் தேர்ப்படையின் துணை வேண்டினான். பகைவர் பார்த்த அள விலேயே பயந்து பின்னிடச் செய்யவல்ல பேருருவம் காண்ப வர் கருத்தைக் குலைக்கும் காட்சி, காற்றெனக் கடுகி ஓடும் விரைவு ஆகிய இவை யத்தனையும் ஒருங்கே வாய்ந்த தேர்ப் படை கொண்டுவந்து சேரரைத் தாக்கினான். ஆனால், தான் அழிவுறாது, பகைவர் படையைப் பாழாக்கவல்ல அத் தேர்ப் படையும், சேரர்களின் களிற்றுப் படையால் நிலை குலைந்தது. முடிவில், சேரர் படை பாழாக, சோழர் படையே வெற்றி கண்டது என்றாலும், சேரரை அவ்வளவு எளிதில் வெற்றி கொள்ள முடியவில்லை சோழரால். சேரரை வெல்ல, சோழர் தம் தேர்ப் படையின் பெரும்பகுதியை இழக்க வேண்டிய தாயிற்று. சேரர் களிற்றுப் படைமுன், சோழர் தேர்ப்படை ஆற்றல் இழந்து அழிந்தது. சோழர்க்குத் தோற்ற சேரர் களின் யானைப்படை, தன் ஆற்றலைத் தொடக்கத்திலேயே இழந்துவிடவில்லை. பகைவர் தேர்ப்படையைப் பாழாக்கிய பின்னரே அது அழிந்தது.

சோழர் படையைச் சேர்ந்த தேர்கள் உயர்வும், உறுதியும் விரைவும் உடையவேனும், அவை சேரர் படையைச் சேர்ந்த களிறுகளின் உரம், ஊக்கங்களின் முன் செயலற்றுப் போயின. தம் அரசர் படையைப் பாழ் செய்வது சோழர் தேர்ப்படையே என்பதைக் கண்ட சேர நாட்டுக் களிறுகள், அத்தேர்ப்படையைத் தம் முழு ஆற்றலும் கொண்டு தாக்கி அழிப்பதில் ஆர்வம் காட்டின. தேர்ப் படை அறவே அழிவுற்றது. உருக் குலைந்து உரம் இழந்து வீழ்ந்த தேர்ப் படையின் அழிவைக் கண்ட பிறகும் களிறுகளின் சினம் தணிந்திலது. தேர்க்கு உயிர்நாடியாய், அதன் இன்றியமையா உறுப்பாய் விளங்குவன அதன் உருள்கள்; தேர்ப்படை தம்மீது, விரைந்தோடி வரத் துணைபுரிவனவும் அவ்வருள்களே என்பதை அறிய அறியக் களிறுகளின் சினம், அவ்வுருள்கள்மீது சென்றது. அழிந்து வீழ்ந்த தேர் உருள்களைத் தம் துதிக்கையால் பற்றித் தூக்கிச் சுமந்து கொண்டவாறே போர்க்களமெங்கும் அலைந்து வலம் வந்தன.

உருவாலும் நிறத்தாலும் மலைகளை நிகர்க்கும் களிறுகள், வட்டவடிவாய், ஒளி வீசும் பொன்னிறம் வாய்ந்த தேர் உருளைகளைச் சுமந்து திரியும் காட்சியைக் கண்டார் ஒரு புலவர். கண்ட காலம் மாலைக் காலம்; ஞாயிறு மேலை மலையினிடைச் சென்று மறையும் காலம். கரிய மலைகளுக்கிடையே மறையும் பொன்னிற ஞாயிற்றின் காட்சி, புலவர்க்குக் களக் காட்சியை நினைவூட்டிற்று. மலைகளுக்கிடையே ஞாயிறு மறையும் அம் மாலைக் காட்சிக்கும், களிறு தேர் உருளையைச் சுமந்து திரியும் களக் காட்சிக்கும் இடையே உள்ள ஒப்புமை கண்டு மகிழ்ந்தது அவர் மனம். அம்மகிழ்ச்சியால் களக் காட்சியின் கொடுமை, அவர் மனக் கண்ணின்று சிறிதே மறைந்தது.

"உருவக் கடுந்தேர் முருக்கி, மற்று அத்தேர்ப்
பரிதி சுமந்தெழுந்த யானை—இருவிசும்பில்
செல்சுடர் சேர்ந்த மலைபோன்ற, செங்கண்மால்
புல்லாரை அட்ட களத்து" —களவழி: 4

## பவளம் சொரியும் பை :

நெடிய பெரிய தேர்ப் படை நிலைகுலைந்ததைக் கண்டனர், சோணாட்டுப் படை'மறவர். சேர வேந்தர்களின் வேழப் படையின் வன்மையினை வாய்மொழியாக முன்னரே கேட்டிருந்த அவர்கள், அதைக் கண்ணெதிரே காணவும் நேர்ந்த விடத்து, அவர் நெஞ்சு நடுங்கிற்று. தேர்ப்படையை யும் தகர்த்தெறியவல்ல திண்மை அக்களிறுகளுக்கு அவற்றின் பருவுடலால் வாய்த்தமை கண்டு வெம்பிற்று. அவர் உள்ளம் களிறுகளின் பருவுடல் கண்டு பெருமூச்செறிந்த வீரர் அப்பரு வுடலைப் பேணுதற்கு வேண்டும் பேருணவைத் தேடியுண்பது அவற்றின் துதிக்கைகள் என அறிந்தவிடத்து அவர் சினம் அத்துதிக்கைகள்பால் சென்றது. எட்டிய மட்டும் நீட்டி, எவ் வளவு திண்ணிய மரங்களையும் முறித்துக் கவளங் கவளங் களாய் வாயிலிட்டு ஊட்டி உயிர்புரக்கும் அவையில்லையேல், களிற்றினம் தம் பருவுடலுக்கு வேண்டும் உணவு பெறுமல் உயிரிழந்துபோம். அவற்றின் உரமும் அற்றுப் போம். அந் நிலை உண்டாகாவாறு பேணிக் காக்கின்றன அவற்றின் தொங்குக் கைகள். அதனால் பெருவலி பெற்ற யானைகள் நெடிய தேர்களையும் தாக்கி அழிக்கும் ஆற்றல் உடைய வாகின்றன. ஆகவே, வேழப்படை வீழ வேண்டுமாயின், அவற்றின் கைகள் அறுபடல் வேண்டும் எப்பாடுபட்டேனும் அவற்றைத் துண்டாடல் வேண்டும், எனத் துணிந்தனர். உடனே, உயிருக்கும் அஞ்சாது வாளேந்தி விரைந்தனர். வேழங்களின் துதிக்கைகளே குறியாக நின்று வெஞ்சமர் புரிந்து, இறுதியில் அவற்றை வெட்டி வீழ்த்தினர்.

தொங்கும் துதிக்கை இடையே துண்டிக்கப் பெற்று வீழ்ந்தது. வெட்டுண்டு விழுப்புண் பெற்ற பகுதியினின்றும் ஒண்ணிறக் குருதி குபுகுபுவென வெளிப்பட்டுக் கொட்டத் தொடங்கிற்று. அக்காட்சி, கண்ணுல் காணமாட்டாக் கொடுமையுடையவேனும், அது, பொன்னும் நவமணியும் விற்கும் பெருவணிகர் வீதியில், பவள வாணிகர், தம்மிடம்

வாணிகம் புரிய வருவார்முன், வகைவகையான பவளங்களை இட்டுக் கட்டி வைத்திருக்கும். நீண்ட பையைக் கட்டவிழ்த்துத் தூக்கிக் கொட்ட, அப்பையினின்றும் செந்நிறப் பவளங்கள் சரசரவெனச் சொரியும் காட்சியைக் கண்முன் கொணர்ந்து காட்ட, களக்கொடுமை மறந்து சிறிதே களிப்பில் ஆழ்ந்தனர்.

"கவளங்கொள் யானையின் கைதுணிக்கப் பட்டுப்
பவளம் சொரிதரு பைபோல்—திவள் ஒளிய
ஒண்செங்குருதி உமிழும், புனல்நாடன்
கொங்கரை அட்ட களத்து" —களவழி : 14

## குளத்து மதகில் குருதி வெள்ளம் :

போர் தொடங்கிவிட்டது. போர் தொடங்கிவிட்டது என்பதைத் தெரிவிக்கவும், படை வீரர்க்கு ஊக்கமும் உள்ளக் கிளர்ச்சியும் உண்டாக்கவும் முரசு முழங்கிற்று. முரசொலி உரம் ஊட்ட, வீரர்கள் வெறிகொண்டு வெஞ்சமர் புரியத் தொடங்கினர். வீரர்களின் ஆற்றலும் ஆண்மையும் கண்டு அஞ்சிய பகைவர்கள், அவர்க்கு உரம் ஊட்டுவது, முரசொலியே என உணர்ந்து, அதைப் பாழாக்க முனைந்தனர். போரில் தம் வெற்றிக்குப் பெருந்துணை புரிவது முரசொலியே என உணர்ந்த வீரர்களும், முரசினைச் சூழ்ந்து காத்து நின்றனர். அதனால் முரசழிக்கும் போரில் பலர் உயிரிழந்தனர். பல உயிர் இழந்தும், பலரை உயிரிழக்கப் பண்ணியும், பகை வீரர் இறுதியில் முரசினை அழித்தனர்; அதன் தோலைக் கிழித்தனர். இடிபோல் ஒலித்துத் தம் படை வீரர்க்கு ஆண்மையும், பகைப்படை வீரர்க்கு அச்சமும் ஊட்டிய முரசு அழிந்தது. தோல் கிழிந்து தொழில் இழந்து போன முரசினைக் காப்பதில் இனிப் பயனில்லை எனக் கருதி, அதற்குரியார், அதைக் களத்தே கைவிட்டுச் சென்றனர். கைவிடப்பட்ட முரசு, களத்தின் ஒருபால் உருண்டு கிடந்தது.

முரசழிவைக் காணக் காண, வீரர்க்கு ஆத்திரம் அதிகமாயிற்று. ஆற்றலெல்லாம் காட்டி அமர் செய்யத் தலைப்பட்டனர். கடும் போர் புரிந்து களத்தைப் பாழாக்கும்

அவரை அழிக்க வேண்டுமாயின், அதற்குத் தன் களிற்றுப் படையின் துணை வேண்டும் எனக் கருதினன் பகை வேந்தன். களிற்றுப் படை களம் புகுந்தது. பாய்ந்து வரும் போர் மறவர்களைத் தாக்கி அழித்தது. பலர் உயிரிழந்து வீழ்ந்தனர். ஆனால், வீழ்ந்த வீரர்கள் வாளா இறந்தாரல்லர். தம்மைத் தாக்கி அழித்த அக்களிறுகளில் சிலவற்றை அவர்களும் கொன்று அழித்தனர். இப்போரின் விளைவால், களம் இரத்தக் காடாயிற்று. செந்நீர் வெள்ளம்போல் பாய்ந்தோடிற்று. வீரர் வாள் பட்டு உயிரிழந்த களிறுகளில் ஒரு களிறு, தோல் இழந்து உருண்டு கிடக்கும் முரசுமீது வீழ்ந்தது. களத்தின் குறுக்கே ஓடிய குருதி வெள்ளம், யானைகள் வீழ்ந்தமையால் ஓடமாட்டாது தடையுற்றது. அவ்வாறு தடையுற்றுத் தேங்கிய குருதி வெள்ளம், இறுதியில், யானையின் உடற்கீழ் அகப்பட்டுக் கிடக்கும் முரசின் ஊடே நுழைந்து பாய்ந்தோடிற்று.

கார் காலத்தில் பெய்யும் மழை நீரைத் தேக்கி வைத்துக் கோடைக் காலத்தில் பயன் கொள்ளும் குளங்கள் பல ஆங்காங்குள. ஆங்குக் கார்காலத்துப் புதுமழை பெய்யப் பெருகிப் பாயும் பெருவெள்ளம், மண்ணின் செந்நிறம் ஏற்றுக் குருதிபோல் சிவந்து ஓடி, மலைபோல் உயர்ந்த கரைகளுக்கு அடியில் அமைத்திருக்கும் மதகுகளின் ஊடே புகுந்து, குளத்தில் நிறையும் காட்சியைக்கண்டு களித்தோர் பலராவர். அக்காட்சியைக் கண்டு களித்த கண்களால், குளத்து மதகின் வழியே பாய்ந்தோடும் செம்மண் வெள்ளம்போல், யானையின் உடலுக்கடியில் அகப்பட்ட இருதலையும் தோல் கிழிந்து போன முரசின் வழியே, இறந்து வீழ்ந்த வீரர்களின் இரத்த ஆறு பாய்வதைக் காண, நேர்வார், கண்கள் நீர் மல்கக் கலங்குவர் அல்லரோ?

**"ஞாட்பினுள் எஞ்சிய ஞாலம்சேர் யானைக்கீழ்ப்**
**போர்ப்புஇல் இடிமுரசின் ஊடுபோம் ஒண்குருதி**
**கார்ப்பெயல் பெய்தபின் செங்குளக் கோட்டுக்கீழ்**
**நீர்த்தூம்பு நீர் உமிழ்வ போன்ற, புனல்நாடன்**
**ஆர்த்து அமர் அட்ட களத்து."** — களவழி: 2

முக்கோட்டியானை :

சேரநாட்டு மன்னனை வென்று சிறைகொள்ள வேண்டு மாயின், அவன் கொண்டுவந்துள்ள வேழப் படையை வலி யிழக்கப் பண்ணுதல் வேண்டும். ஆனால் அவ்வேழப் படையோ, எளிதில் அழிந்து போகக்கூடியதன்று. அதை வெற்றி கொள்வது வாட்படை வீரரால் இயலாது. வேழங் களை நெருங்கிய பின்னரல்லவோ வாள்கள் தொழிற்படும். வேழங்கள்தாம் வீரர் தம்மை அணுகுவதற்கு முன்பே தம் நீண்ட கைகளால் அவரை அழித்துவிடுகின்றனவே. அதனால் வாட்படை, வேழப் படையை வென்றழிக்கும் என எதிர் பார்த்தற்கு இடம் இல்லை. வில் வீரர் துணையால் வீழ்த்த லாம் எனிலோ, அதுவும் இயலாது. வீரர் ஏவ வில்லினின்றும் விரைந்து புறப்படும் அம்புகள், வேழங்களின் பருவுடலில், எங்கோ ஒரு பகுதியில் பாய்ந்துவிடுகின்றன. தம் உடம்பில் அம்பேறுண்டது என்ற உணர்வுதானும் வேழங்களுக்கு உண் டாவதாகத் தெரிந்திலது. ஆகவே வேழங்களை வில் வீரர் வென்று அழிக்கார். வேழங்களை அணுகுவதும் கூடாது' வாள் வீச்சால் விளையும் விழுப் புண்போலும் பெரும் பெரும் புண்களை உண்டாக்குவதும் வேண்டும். வாள் வீரராலும், வில் வீரராலும் முடியாத அதை வேல் வீரர் முடிப்பர் என அறிந் தான் சோணாட்டு மன்னன். உடனே வேற்படை வேழப் படை முன் சென்று நின்றது.

வேழங்களை எதிர்த்து நின்ற வேல் வீரர்கள், பகைவர் அரணைப் பாழாக்கவல்ல திண்மை வேழங்களுக்கு அவற்றின் கோடுகளினால் உண்டாவதைக் கண்டனர். அவை, தம் கோடுகளால் அரணை முட்டி அழிப்பதைத் தடுக்க வேண்டு மேல், அக்கோடுகளைப் பயனிழக்கப் பண்ணுதல் வேண்டும். அவற்றைப் பயனிலவாக்க வேண்டுமேல், இரு கோடுகளுக்கு மிடையே, பருவேல் ஒன்றைப் பாய்ச்சுதல் வேண்டும். தந்தங்கள் அரண் மதிலைத் தாக்குவதன்முன், அவ்வேல் அம் மதிலைத் தாக்குதல் வேண்டும். அப்போது அது தைத்துப் பண்ணிய புண் பெரு நோய் அளிக்கும். அந்நோய் மிகுதியால்

வேழங்கள், தம் அழித்தல் தொழிலை மறந்துவிடும் என உணர்ந்தனர். உடனே, ஆற்றல் கொண்ட மட்டும் தம் தோள்களை ஓச்சி, கை வேலைக் களிறுகளின் நுதலிற் குறி வைத்து வீசி எறிந்தனர். எதிர்பார்த்தவாறே, வேல்களும் விரைத்து சென்று வேழங்களின் நுதலில் ஆழப்பதிந்தன. அரசிலை போலும் முனையும் அடித்தண்டின் ஒரு பகுதியும் உள்ளே அழுந்திக்கொள்ளக் காம்பின் கடைப் பகுதிமட்டும். இருகோடுகளுக்கிடையே வெளிப்பட்டு நின்றது. இருகோடு களுக்கிடையே வேலேறுண்ட அவ்வேழங்கள் முக்கோட்ட வேழங்கள் போல் தோன்றிக் காண்பவர் அகத்தில் அழுகையும் நகையும் ஒருங்கே தோன்றுவித்தன.

> "இடை மருப்பின் விட்டெறிந்த எஃகம்கால் மூழ்கிக்
> கடைமணி காண்வரத் தோற்றி—நடைமெலிந்து
> முக்கோட்ட போன்ற களிறெல்லாம், நீர்நாடன்
> புக்கு அமர் அட்ட களத்து." களவழி: 19

## நிலம் உழும் யானை :

கழுமலக் கோட்டையைத் தகர்த்து, அதைக் காத்து நிற்கும் கொங்கு நாட்டுப் படைத் தலைவர்களைக் கொன்று அவர் வேழப் படையை வீறிழக்கப் பண்ணிச் சேரமான் கணைக்காலிரும் பொறையைச் சிறைசெய்துகொண்டு போதல் வேண்டும் என்ற வேட்கை, சோழன் செங்கணான் உள்ளத்தில் வேரூன்றி வளர்ந்துவிட்டது. அதனால் அதை நிறைவேற்றிக் கொள்ளத் தன் படைபலம் முழுவதையும் பயன் கொள்ளத் துணிந்தான். வாட் படை, விற்படை, வேற்படை முதலாம் பல்வகைப் படைகளும் போர்க்களம் புகுந்தன. படை மறவர்க்கு ஊக்கம் அளிக்க, போர்ப்பறை ஓயாது ஒலித்துக்கொண்டேயிருந்தது. மாரிக்காலத்து மழைத் தாரைகளென, அம்புகள் வில்லினின்றும் வரிசை வரிசையாக வெளிப்பட்டுக் களமெங்கும் விரைந்து மொய்த்தன. வேற்படை பலவும் ஒன்றுகூடி நின்று உரம்கொண்டு போரிட்டன. களம் குருதிக் காடாய்க் காட்சி அளித்தது.

சோஞட்டு வாட்படைக்கே வலியிழந்துபோன சேர நாட்டு வேழப்படை, வில்வீரர்களும் வேல் வீரர்களும் கூடிச் செய்யும் தாக்குதலைத் தாங்க மாட்டாது தளர்ந்தது. உடலெல்லாம் அம்புகள் தைக்க, மார்பிலும் நுதலிலும் வேல்கள் ஊடுருவ, வேழங்கள் நிற்கவும் மாட்டாது சோர்வுற்றன; தளர்ந்து தள்ளாடி, வரிசை வரிசையாக முகம் கவிழ்ந்து மண்ணில் சாய்ந்தன. அவை மண்ணில் சாயவே, அவற்றின் கோடுகள், குருதி தேங்கும் களத்து மண்ணில் ஆழப்புதைந்து கொண்டன.

நிலைகுலையா மலைகளென நின்று காட்சி தரும் களிறுகள், வலியிழந்து, வெண்கோடுகள் மண்ணுள் புதைந்து மறைய முகங்கவிழ்ந்து சாய்ந்துகிடக்கும் காட்சி, காண்பவர் கருத்தைக் கலக்கும் கொடுமையுடையதேனும், கீழே குருதிநீர் தேங்க, அதனிடையே களிறுகள் கவிழ்ந்து கிடக்கும் அக்காட்சி, களிறுநிகர் காளைகள், வெள்ளியால் புனையப்பெற்ற வெண்ணிறக் கலப்பைகளை ஈர்த்து, தண்ணீரால் ஈரம்பட்ட செந்நிலத்தை உழும் காட்சிபோல் தோன்றிக் களக் கொடுமையைச் சிறிதே மறைத்துக் காட்டிற்று.

> "வெள்ளி வெண்ணுஞ்சிலால் ஞாலம் உழுவனபோல்
> எல்லாக்களிறும் நிலம் சேர்ந்த—பல்வேல்
> பணைமுழங்கு போர்த்தானைச் செங்கண் சினமால்
> கணைமாரி பெய்த களத்து."  —களவழி: 40

## குருதிப்புனலுள் களிற்றுடம்பு :

கணைக்காலிரும் பொறையின் களிற்றுப் படையைச் செங்கணுன் வெற்றி கொண்டான். ஆனுல், அவ்வெற்றி எளிதில் வாய்த்துவிடவில்லை. களம்பல கண்டு, நாடு பல வென்று, வேந்தர் பலரின் வீறுகளை அழித்துப் புகழ் மாலை சூடிய அவன் வேற்படை களம் புகுந்த பின்னரே வெற்றித் திருமகள், தன் அருள் நோக்கை அவன்பால் திருப்பினுள். களம்புகுந்த அவ் வீரர்களும், புகுந்தவுடனே வெற்றி கண்டாரல்லர். வேழப் படையுடன் நெடும்பொழுது வெஞ்சமர் புரிந்தனர். வெற்றி

வாய்ப்பதாகத் தோன்றவில்லை. களிறுகள்முன், கால் கடுக்க நின்றும், கால் வலிக்க விரைந்து ஓடியும் போரிடின், பல நாளாயினும்போர் முடிவுறாது. களிறுகள் எட்டாவுயரத்தில், அவை விரைந்து துரத்தினும் அவற்றால் பற்றப் பெறாது, பின்னோக்கியும் முன்னோக்கியும் விரைந்தோடவல்ல தேர்மீது இருந்து போரிட்டாலல்லது அவற்றைப் புறங்காண்டல் இயலாது என உணர்ந்தனர். உடனே, வேற்படைக்குத் துணையாகத் தேர்ப்படை களம் புகுந்தது. களிறுகள் பல கூடிப் பலமுறை தாக்கினும் தகர்ந்து அழிவுறாத் திண்மை வாய்ந்த தேர்கள் எண்ணிலாதன வேல்வீரர்களை ஏற்றிக் கொண்டு வேழப்படை நோக்கி விரைந்தன. வன்மையிற் சிறந்த வேல்வீரர்கள், தேர்மீதிருந்தவாறே, தம் கைவேலை உரங்கொண்டளவும் ஓங்கி, வேழங்களின் முகம்நோக்கி எறிந்தனர். வேல்களும், குறி பிழையாமல் விரைந்து, வேழங்களின் நுதலில் பாய்ந்து, அவற்றைப் பிளந்து புண்ணாக்கின. அக்கணமே, களிறுகள், உயிரிழந்து வீழ்ந்தன. ஆனால், வீழ்ந்த களிற்றின் உடல்கள், களத்து மண்மீது வீழ்ந்தில. களிற்றுப்போர் முடிவுறுதற்கு முன்பே களம் குருதி வெள்ளத்தில் ஆழ்ந்து மறைவுற்றிருந்தது. போரில் உயிரிழந்து வீழ்ந்த ஆயிரம் ஆயிரம் உடல்களினின்றும் பெருகிய செந்நீர், களமெங்கும் நிறைந்து தேங்கிக் கிடந்தது. அதனால் களிற்றின் உடல்கள், களத்து மண்ணில் வீழாமல், குருதி வெள்ளத்தில் வீழ்ந்து மிதந்தன.

களமெங்கும் செக்கச் செவேலெனப் பரந்த செந்நீர் வெள்ளத்தின் இடையிடையே களிறுகளின் கருநிறப் பருவுடல் மிதக்கும் அக்காட்சி, அந்திக் காலத்துச் செவ்வானின் இடையிடையே, நீர்க்கொண்ட கருமுகில்கள் காட்சியளிக்கும் கவின்மிகு காட்சியைக் காட்டிக் களிப்பூட்டிற்று.

"எற்றி வயவர் எறிய நுதல்பிளந்து
நெய்த்தோர்ப் புனலுள் நிவந்த களிற்றுடம்பு
செக்கர்கொள் வானில் கருங்கொண்மூப் போன்றவே
கொற்றவேல் தானைக் கொடித்திண்தேர்ச் செம்பியன்
செற்றாரை அட்ட களத்து." —களவழி: 23.

## குதிரை உதைத்த குடை :

கழுமல நகர்க்கோட்டை, பகைவர்க்குப் பாதுகாப் பளிக்கும் காவற்கூடமாய் இருக்கும்வரை, சோணாடு, வான் பொய்ப்பினும் தான் பொய்யாக் காவிரிப் பாய்ச்சலால், வளங்கொழிக்கினும் அமைதி நிலவும் நல்வாழ்வைப் பெறாது என உணர்ந்தான் செங்கணான். அதனால் அவ்வரணை அழித்தல் வேண்டும். அதனுள் படைகொண்டிருக்கும் பகை யரசர்களைப் பாழ்செய்தல் வேண்டும் எனத் துணிந்தான். அவன் உள்ளத்தில் அத்துணிவே தலைதூக்கி நின்றமையால், நாற்படையால் நிறைவுற்ற சோணாட்டுப் படையின் சீரழிவு குறித்து அவன் சிந்தித்தானல்லன். தன் படையனைத்தையும் கழுமலநகர்க் களத்திற்குக் கொண்டு சென்றான்.

சோணாட்டுப் படைத் தலைவன் செருக்குமிக்குச் சமர் புரிந்தான்; அவன் படை ஆற்றல்மிக்கு அமர்புரிந்தது. அதனால், பகைவர் பலர் கூடிநின்று எதிர்த்தும், இறுதியில் அழிவுற்றனர்; அவர்களைக் காத்துநின்ற கழுமலக் கோட்டை அழிவுற்றுப் பகைவன் கைப்பட்டது. சேரநாட்டுத் தேர்ப் படை சிதைவுற்றது, உருள்ஒருபால், குடைஒருபால், கொடி ஒருபாலாகக் கவிழ்ந்து உருக் குலைந்தது. பகைவர்க்குப் பெருமையளித்த அவர் தேர்ப்படை பாழான பின்னரும், சோணாட்டுப் படை சோர்வுற்றிலது. பகைவர் அழிவைக் காணக் காண, அது மேலும் உரங்கொண்டு அமர் புரிந்தது. சோணாட்டுப் படை வரிசையில், குதிரைப்படை சிறந்து விளங் கிற்று. காற்றெனக் கடுகிப் பாயும் அக்குதிரைகள், பகை வரின் தேர்ப்படை அழிந்து பாழுற்ற களத்தைத் தாண்டிச் சென்று சமர்புரியத் துடித்தன; அவை அவ்வாறு பாய்ந் தோடுங்கால், ஆங்கு ஒடிந்து வீழ்ந்து கிடக்கும் பகை வேந்தர் களின் வெண்கொற்றக் குடைகள், அக்குதிரைகளின் கால் களால் இடருண்டு, தலைகீழாக உருண்டோடி வீழ்ந்தன. தன் படையின் முன் வரிசைக்கண் தேர்மீதமர்ந்து, அக்களக் காட்சியைக் கண்ணுற்றிருந்த செங்கணான், குதிரைகளின் கால்பட்டுக் குடைகள் தலைகீழாகப் புரண்டுவிழும் அக்காட்சி

கார்காலத்தில், ஆங்காங்கே முளைத்துக் கிடக்கும் காளான்கள் புல்லுணவுண்ணும் ஆர்வம் பெருக, காடு நோக்கி விரைந்தோடும் ஆனிரைகளின் கால்பட்டு, சிதைவுற்றுச் சீரழியும் கவின்மிகு காட்சியை நினைவூட்ட, தன்னாட்டு நில நீர்வளங்களையும், தன் நாற்படையின் பேராற்றற் பெருமையினையும் எண்ணி இறும்பூதெய்தினான்.

"ஓஓ! உவமன் உறழ்வின்றி ஒத்ததே;
காவிரிநாடன் கழுமலம் கொண்டநாள்
மா உதைப்ப மாற்றார் குடையெலாம் கீழ்மேலா
ஆ உதை காளாம்பி போன்ற, புனல்நாடன்
மேவாரை அட்டகளத்து." —களவழி: 36.

### கருடன் வாயில் கை :

வீரர்க்கும் வீரர் அவ்வீரர்களே அவர்கள் புகமுடியாத இடம் அப்போர்களத்தில் எதுவும் இல்லை. அவர்கள் விரும்பினால், அவர்களைத் தடுத்து நிறுத்த வல்லவர் பகைவர் படை வரிசையுள் ஒருவரும் இலர். ஆண்மையும் ஆற்றலும் அத்துணை மிகுதியாகப் பொருந்தியிருந்தமையால், அவர்கள் களமெங்கும் புகுந்து புகுந்து கடும்போரிட்டனர். அம்மட்டோ! அவ்வீரர்கள், போர்க்கள நிலையையும், போர் முறைகளையும் தெளிவாக உணர்ந்திருந்தனர். அதனால், படை வரிசையில் படைக்கு உயிரளிப்பது நாற்படையுள் எப்படை என்பதை நன்கு அறிந்திருந்தனர். நால்வகைப் படையுள், களிறும், தேரும், குதிரையும் பகைவரைப் பாழ்செய்வதில் பெருந்துணை புரிவனவேயாயினும், அவை தாமே இயங்கா. அவற்றை இயக்கக் காலாட் படையின் துணைவேண்டும். அது இயக்கினாலல்லது அவை இயங்கா. ஆகவே, அம்முதற் படை மூன்றினும் வீரர் படையே, படை வரிசைக்கு வேராம். ஆகவே, அவற்றை அழிப்பதினும் அவற்றை இயக்கும் வீரர் படையை அழிப்பதே வெற்றிக்கு வழியாம்; குடம் உடையான் வீழக் குடமும் வீழ்தல்போல், வீரர் அழியின், அவர் இயக்கும் அவையும் அழியும். அம்முறையால் காலக்கேடும், உயிர்க்கேடும்

குறையும் என்ற போர் நுணுக்கத்தை அறிந்திருந்தமையால் அவ்வீரர்கள் பகை வேந்தனின் நாற்படையுள், காலாட் படையைத் தேர்ந்து கடும்போரிட்டனர். வீரர்களின் வாள் பட்டு, பகைவரின் காலாட் படை வன்மை இழந்தது. தலை இழந்தும், தோள் இழந்தும், காலற்றும் கணக்கற்றோர் வீழ்ந்தனர். அறுபட்ட தலைகளும், துண்டிக்கப்பெற்ற தோள்களும், முடம்பட்ட கால்களும் களமெங்கும் காட்சி அளித்தன.

பார்க்குமிடமெங்கும் பிணமலைகளே காட்சி அளிக்கக் கண்ட பறவைக் கூட்டம், அக்களத்தைப், பல கூடி அடைந்து வான வீதியில் வட்டமிட்டுப் பறந்தன. அவற்றுள், பெரிய வலிய பருந்தொன்று, துணிந்து களம்புகுந்து ஆங்கு அறுபட்டு வீழ்ந்து கிடந்த கைகளுள் ஒன்றைக் கெளவி யெழுந்து பறந்தோடிற்று. ஐவிரல்களோடும் கூடிய கையை வாயிற் கெளவிக் கொண்டவாறே விண்ணில் பறக்கும் பருந் தின் தோற்றம் தன் இனத்தின் பகையினத்தைச் சேர்ந்த ஐந்தலை நாகத்தைக் கொன்று, கொன்ற அவ்வெற்றிப் புகழ் விளங்க, அதைத் தன் கால் விரல்களுக்கிடையே பற்றி விண்ணிற் பறந்து திரியும் கருடன் காட்சியை நினைவூட்டக் கண்டு, களம்காண்பார், களத்தின் கொடுமையைச் சிறிதே மறந்து, மகிழவும் செய்தனர்.

> **"எவ்வாயும் ஓடி வயவர் துணித்திட்ட**
> **கைவாயில் கொண்டெழுந்த செஞ்செவிப் புள்சேவல்**
> **ஐவாய் வயநாகம் கவ்வி, விசும்இவரும்**
> **செவ்வாய் உவணத்தில் தோன்றும், புனல்நாடன்**
> **தெவ்வரை அட்டகளத்து."** —*களவழி* : **26**

**கையைக் கவ்வி ஓடும் குறுநரி :**

சோணாட்டு வாட்படை வீரர்களின் தாக்குதலைத் தாங்க மாட்டாது, சேர நாட்டுவீரர்கள் தளர்ந்தனர். சோணாட் டாரை வென்று துரத்துவது தம்மால் இயலாது என்பதை

அறிந்து கொண்டதும், கொங்கு நாட்டார் தம் போர் முறையை மாற்றிக் கொண்டனர். சென்று தாக்குவதைக் கைவிட்டு நின்று தாக்க முனைந்தனர். சோணாட்டு வீரர்களின் வாட்படையை வலியிழக்கப் பண்ணுவதில் கருத்தினைச் செலுத்தினர். அதனால் அவர் வாள் வீச்சினைத் தளராது தாங்கி நிற்கும் வண்ணம் துணைபுரியவல்ல பெரிய கேடயங்களைக் கையில் ஏந்திக் களம் புகுந்தனர். அதனால் வென்று துரத்துவதல்லது தோற்று ஓடுவதை அறியாத சோணாட்டு வாள்வீரர், பிறகளங்களில் எளிதில் வெற்றி கண்டதுபோல், கழுமலக் களத்தில் வெற்றிகாண மாட்டாது கலங்கினர். அதனால் கடுஞ்சினம் கொண்டனர். போர்வெறி தலைக்கேறியது. களம் பல கண்டு வாகை சூடிய வாள்களைத் தேர்ந்தெடுத்து, கைக் கொண்டு களம் புகுந்தனர். சோணாட்டார் முன்னேறித் தாக்கினர். சேரநாட்டார் எதிர்நின்று தாங்கினர். வெற்றி தோல்வி காணமாட்டாத போர் நெடும்பொழுது நிகழ்ந்தது. இறுதியில் தம் வாட்படை வலியிழந்து வீணாவது, பகைவீரர் பற்றிநிற்கும் கேடகத்தால் என்பதைச் சோணாட்டு வாள்வீரர் உணர்ந்துகொண்டனர். உடனே அவர் நோக்கம் அது ஏந்திய இடது கையில் சென்றது. குறிபார்த்து, அவ்விடது கைகளை வெட்டி வீழ்த்தினர். சேர நாட்டு வீரர் இடக்கைகளை இழந்தனர். ஆனால், அந்நிலையிலும் அவர் ஆற்றல் குன்றவில்லை. கைகள் அற்று வீழ்ந்தனவேனும் அவை தாம் பற்றிய கேடகங்களை, அப்போதும் நழுவவிட்டில. அவற்றை இறுகப் பற்றியவாறே இற்று வீழ்ந்தன.

போர் ஒருவாறு ஓய்ந்தது, போர் ஆரவாரம் அடங்கிற்று. களத்தில் வீழ்ந்து கிடக்கும் பிணங்களினின்றும் எழுந்த நாற்றம் நால்வேறு திசையிலும் சென்று வீசிற்று. அந்நாற்றத்தை நுகர்ந்த நரிக் கூட்டம் நல்ல விருந்து கிடைத்தது எனும் நினைவால், நாக்கில் நீர் ஊறக் களத்தை அடைந்தன. அந்நரிகளுள் ஒன்று, கேடகத்தைப் பிடித்த பிடிதளராமல் அறுந்து வீழ்ந்து கிடக்கும் கையை வாயில் கௌவிக்

கொண்டு காடு நோக்கி விரைந்தது. அக்காட்சி காணக் கூடாக் கொடுமையுடையதே யெனினும், கை, கேடகத்தைத் தூக்கிப் பிடிக்க, அக்கையைக் கௌவி ஓடும் நரி, அரசர் பெருங்கோயிலிலும், செல்வர் மாளிகைகளிலும், பெருங்குடி மகளிர் காணக் கையில் கண்ணாடியேந்தி விரையும் பணி மகளிர்போல் தோன்றக் களக் கொடுமையைச் சிறிதே குறைத்துக் காட்டிற்று.

> "ஓடாமறவர் உருத்து மதம்செழுகிப்
> பீடுடை வாளர் பிறங்கிய ஞாட்பினுள்
> கேடகத்தோடு அற்ற தடக்கை கொண்டோடி
> இகலன் வாய்த்துற்றிய தோற்றம் அயலார்க்குக்
> கண்ணாடி காண்பாரிற் றோன்றும், புனல்நாடன்
> நண்ணாரை அட்ட களத்து." —களவழி : 28.

பவளத்தூள் பரந்தது :

போர், ஞாயிறு. தோன்றுவதற்குமுன்பே தொடங்கி விட்டது. வீரர்களின் போர்வெறி, பொழுது புலரும் வரை பொறுத்திலது. இருள் எதிர் வருவாரை மறைக்குமே! முன் வருவார் யாவர்? பகைவரோ அல்லது பரிவுகாட்டத்தக்க நண்பரோ என்பதை அறிதற்கும் வாய்ப்பில்லையே என எண்ணி வாளாக்கிடக்க மறுத்தனர்! போர்வாள் வீசும் பேரொளியே போதும். ஒன்னார் யார் உற்றார் யார் என்பதை அறிய எனத் துணிந்தார்போலும். வாளேந்திக் களம் புகுந்து விட்டனர்.

இருதிறப் படைவீரர்க்கு மிடையே வாட்போர் தொடங்கிவிட்டது. சேரநாட்டு வீரரின் வாளுக்குச் சோணாட்டு வீரர் பலர் இரையாயினர். அவ்வாறே சோழ வீரரின் வாள்பட்டு சேர வீரர் பலர் உயிரிழந்து வீழ்ந்தனர். வாள், வீழ்ந்தாரை வறிதே வீழ்த்தவில்லை. அவை, அவர் உடலில் முழுதும் மறையுமாறு பல முறை ஆழமாகப் பதிந்து பதிந்து, அவ்வுடல்களைச் சல்லடைக் கண்களென

துளைத்த பின்னரே, வீரர்கள் வீழ்ந்து மடிந்தனர். வாள் ஒரு முறை பட்டதும், உயிரிழந்து வீழ்ந்துவிட, அவ்வீரர்கள், ஆற்றல் இழந்தவரல்லரே!

வீழ்ந்த வீரர் உடல்களில் வாள்பட்டு உண்டான விழுப் புண்களினின்றும், குருதி, குபுகுபுவென வெளிப் பட்டு, ஆறு எனப் பெருக்கெடுத் தோடிற்று. குருதி வெள்ளத் தால், போர்க் களம், செங்களமாய் மாறிக் காட்சி அளித்தது. இவ்வளவும் ஞாயிறு தோன்றுவதற்கு முன்பே நிகழ்ந்து விட்டது. அவனும் தோன்றிவிட்டான். இருள் அகல, ஒளி பரவிற்று செங்களக் காட்சிக்கும், ஞாயிறு தோன்றும் செவ் வானத்திற்கும் வேற்றுமையே தோன்றவில்லை. அத்துணைச் சிவந்திருந்தது போர்க்களம்.

பொழுது புலரக் களநிலைகண்டனர் காவலர் இருவரும்; கண்டும் அவர் போர் வெறி தணியவில்லை. வாள் வீரர் வலி யிழந்து போகவே, தத்தம் களிற்றுப் படைகளைக் களம் நோக்கி விட்டனர். களம் புகுந்த களிறுகள், எதிர் வரும் எப்பொருளையும் அழித்து மதம் கொண்டு திரிந்தன. கீழே குருதி வெள்ளம்; போர் வெறியால் அதையும் பொருட்படுத்த வில்லை. களம், களிறும் தேரும் கடுக ஓடுமாறு உரம் வாய்ந்த வன்னிலமே ஆயினும், குருதி, வெள்ளம்போல் பாய்வதாலும், அவ்வெள்ளத்திலும் விரைந்து பாய்ந்து போர் புரியும் களிறு களின் கூட்ட மிகுதியாலும், அவ்வன்னிலமும் சேறுபடத் தொடங்கிவிட்டது. அந்நிலத்தைச் சேருக்கவுதவிய நீர், செந்நீராதலின், பட்ட சேறு, செஞ்சாந்துக் குழம்பெனச் சிவந்து காட்டிற்று.

காலையில் சேறுபடத் தொடங்கிய களம், ஞாயிறு உச்சிப் பொழுதை அடைவதற்குள் பெருஞ்சேறுபட்டுவிட்டது. களிறுகளையும் கால் வழுக்கப் பண்ணும் பெருஞ்சேருய் மாறி விட்டது. அந்நிலையிலும் போர் ஓயவில்லை. களிறுகள், கால் வழுக்கக் கண்டும் தளரவில்லை. களம் முற்றும் உழன்று உழன்று போரிட்டுக்கொண்டே யிருந்தன. ஞாயிறும்,

வெப்பம் மிக்க கொடிய கதிர்களை வீசிக் காய்ந்தான். களிறுகள் பல முறை மிதித்து மிதித்து உழக்குவதாலும், ஞாயிற்றின் வெப்ப மிகுதியாலும், சேறு, சிறிது சிறிதாக ஈரம் புலர்ந்து உலரத் தொடங்கிவிட்டது. ஞாயிறு மேலைத் திசை அடைவதற்குள், களத்தில் ஈரம் அறவே புலர்ந்து விட்டது. ஈரம் அற்ற அக்களத்தைவிட்டு, களிறுகள் அந்நிலையிலும் அகலவில்லை. கால்களைத் தளைத்த சேறு அற்றுப் போனமையால், அவை, முன்னிலும் மிகுதியாக விரைந்தோடி அமர் புரிந்தன. அதனால் களத்தில் புழுதிப்படலம் எழுந்து படர்ந்தது.

களத்தில் சிந்திய செந்நீரின் ஈரம் புலர்ந்துவிட்டது. ஆனால் அக்குருதியின் செந்நிறத்தைக் களத்துமண் இழக்கவில்லை. அதனால், அக்களத்தில், எழுந்த புழுதி செந்நிறப் புழுதியாய், ஞாயிறு மறையும் செவ்வானம் என எழுந்து எங்கும் பரந்தது. ஆங்கு எழுந்த அப்புழுதிப்படலம், பவளத்தை இடித்துப் பொடியாக்கிக் காற்றில் பறக்க விட்டாற் போலும் காட்சி அளித்தது.

> "நாள் ஞாயிறு உற்ற செருவிற்கு வீழ்ந்தவர்
> வாள்மாய் குருதி, களிறு உழக்கத்—தான்மாய்ந்து
> முன்பகலெல்லாம் குழம்பாகிப், பின்பகல்
> துப்புத் துகளில் கெழூஉம், புனல் நாடன்
> தப்பியார் அட்டகளத்து." —களவழி : 1.

## களிற்றுக் கோட்டால் குருதிச் சேற்றைக் கடத்தல் :

கழுமல நகரில் பாடிக் கொண்டிருந்த சேரநாட்டுப் பெரும் படைகளை எதிர்த்துப் போரிட்டுக் கொண்டிருந்தனர் செங்கணான் படைவீரர்கள். 'மேதக்க வேழம் உடைத்து மலைநாடு' எனப் பாராட்டப்பெற்ற மலைநாட்டு மன்னனாதலின், சேரன் படையில் யானைகள் அதிகமாய் இருந்தன. அவ் யானைப்படையை அழித்து அமர் வெல்வது அவ்வளவு எளிதன்று ஆயினும், அக்களிற்றுப்படை கண்டு, சோணாட்டுப் படைவீரர் கலங்கினாரல்லர்; கையில் வாளேந்திக் களம்

புகுந்து களிறுகள் கணக்கற்றனவற்றைக் கொன்று குவித்தனர். களிறுகளின் பிணக்குவியல் பெருமலையெனக் காட்சி அளித்தது. அக்களிறுகளின் பருவுடல்களிலிருந்து பெருகி ஓடிய குருதி வெள்ளத்தால், களம் சேறுபட்டது. சேற்று நிலத்தில் மெல்ல அடியெடுத்து வைப்பதும் இயலாதாயிற்று; அந்நிலையிலும் சோனுட்டு வீரர்கள் சோர்ந்துபோகவில்லை. ஆற்றல் மிகுந்து ஓடி ஓடிப் போரிட்டுக்கொண்டே இருந்தனர். ஆனால் அவர் ஆற்றல் குறைந்திலது என்றாலும், களத்தின் குருதிச் சேறு அவர் கால்களைத் தளைக்கத் தொடங்கிவிட்டது. அதனால் அவர் கால்கள் தளர்வுற்றன. வீரர்கள் வழுக்கி வழுக்கி வீழ்ந்தனர்; அதனால் அவர் உடலும் தளர்ந்தன; ஆனால், அந்நிலையிலும் அவர்கள் உள்ளத்தில் உரம் மிகுந்தே விளங்கினர். போர் வெறி அவர் உள்ளத்தை விட்டு அகலவில்லை. மேலேறிச் சென்று தாக்கி, மேலும் பல களிறுகளைக் கொன்று குவிக்க விரைந்தது அவர் உள்ளம்; ஆனால் கால்கள் தளர்ச்சியுறுவதை அவர்கள் உணர்ந்தார்கள். செய்வதறியாது சிறிது திகைத்தார்கள்; அந்நிலையில், களத்தில் அவர்கள் கொன்று வீழ்த்திய வேழங்களின் வெண் கோடுகள் ஆங்காங்கே சிதறிக் கிடப்பது அவர் கண்ணில் பட்டது; ஊன்று கோலாய் உதவுமளவு நீண்டு வளர்ந்திருந்த அக்கோடுகளைக் காணவே அவர் கலக்கம் அகன்றது. அக் கோடுகளையே ஊன்று கோலாகக் கொண்டு குருதிச் சேற்றைப் பொருட்படுத்தாது, முன்னேறிச் சென்று தாக்கி வென்றனர். என்னே அவர் வீரம்.

> "ஒழுக்கும் குருதி உழக்கித் தளர்வார்
> இழுக்கும் களிற்றுக்கோடு ஊன்றி எழுவர்;
> மழைக்குரல் மாமுரசின் மல்குநீர் நாடன்
> பிழைத்தாரை அட்ட களத்து" —களவழி : 3.

## உருவிழந்த கருங்காக்கை :

கழுமலக் களத்தில் எதிர் எதிர் நின்று போரிடும் சேரர் சோழர் ஆகிய இருதிறப் படையிலும் சிறந்திருந்த வில்

வீரரும் வேல் வீரரும் தத்தம் அமர்த் திறத்தை அதிசயிக்கும் வகையில் காட்டிப் போர்புரிந்துகொண்டிருந்தனர். அவர் வீசி எறிந்த வேற்படைகளும், அவர் கைவில்லிலிருந்து விரைந்து வெளிப்பட்ட அம்புகளும் எதிர்வரும் வீரர் உடல்களிலும் களிறுகளின் உடல்களிலும், குதிரைகளின் உடல்களிலும் ஆழப்பதிந்து, அவ்வுடல்களில் பெரிய பெரிய புண்களை உண்டாக்கிவிட்டன. அப்புண்களிலிருந்து கொப்புளித்துக்கொண்டு வெளிப்பட்டு, வெள்ளமெனப் பாய்ந்தோடத் தொடங்கிற்று குருதி.

எங்கே குருதிவாடை வீசினும், ஆங்குத் தம் இனத்தோடு சென்று குடரையும், குடரிலிருந்து சொரியும் குருதியையும் உண்டும் குடித்தும் உயிர் வாழும் இயல்புடைய காகங்கள், குருதி ஆறு பாயும் அக்களத்தில் வந்து குவிந்தன. காக்கைகளின் குருதிவேட்கை, அக்குருதி, புண்களிலிருந்து வெளிப்பட்டு விழும்வரை காத்திருக்க விரும்பவில்லை. புண்களை விட்டுப் புறப்படும்போதே குடிக்கத் துடித்தன. அவ்வாறே வீரர் மார்பிலும் தோளிலும், விலங்குகளின் உடல்களிலும் உண்டான விழுப் புண்களைக் குத்திக் குடிக்கத் தொடங்கின. போர்வெறி மிகுதியால் மெய்ம் மறந்து போரிட்டுக் கொண்டிருந்தமையால், வீரர்களும், விலங்குகளும், காகங்கள் புண்களில் வாய்வைத்துக் குருதி குடிப்பதைப் பொருட் படுத்தினரல்லர். அதனால் காகங்கள் குருதியை அமைதியாகக் குடித்துக்கொண்டிருந்தன.

அங்ஙனம் குடிக்கும்போது, அப்புண்களிலிருந்து புறப்படும் குருதி வேகமாக வெளிப்படுவதால், அது அக்காகங்களின், உடலை நனைக்குமளவு எழும்பி எழும்பி வீழ்ந்தது. குருதி குடிப்பதால் காகங்களின் அலகுகள் கருநிறம் இழந்து செந்நிறம் பெற்று விளங்க, கொப்புளித்து விழும் குருதியால் நனைந்து உடல்களின் கருநிறமும் மறைந்து போகச் செம்மேனி பெற்றன. அந்நிலையில், அவற்றைக் காண்பவர் எவரும், அவற்றைக் காக்கை எனக் கருதார். அலகை நோக்க மீன் குத்திப் பறவையோ எனச் சிலர் மயங்க, உடலை நோக்கச்

செம்போத்துப் பறவையோ எனச் சிலர் மயங்கக், கருநிறக் காக்கைகள் நிறம் மாற உருமாறிக் காட்சி அளித்தன. அவை அந்த அளவு ஆகுமாறு, அன்று நடந்த அமரில், விற்படை வேற்படை வீரர்கள் வெறிகொண்டு போரிட்டனர்.

"தெரிகணை, எஃகம் திறந்த வாயெல்லாம்
குருதி படிந்து உண்ட காகம்—உருவுஇழந்து
குக்கில் புறத்த; சிரல்வாய; செங்கண்மால்
தப்பியார் அட்ட களத்து."  —களவழி : 5

## செம்பஞ்சுக் கூடை :

போர் நெடும்பொழுது நடைபெற்றுவிட்டது. அதனால், அன்றைய போரை அந்த அளவோடு நிறுத்திக்கொள்ளக் கருதினார்கள் படைத் தலைவர்கள். உடனே இருதிறப் படை முனைகளிலிருந்தும் போர் நிறுத்த முரசுகள் முழங்கின. அது கேட்டனர் படை வீரர்கள். படைத்தலைவர் ஆணைக்கு அடங்கிப் பாசறை புக விரும்பினார்கள் அவர்களும். ஆனால், அவர் ஆண்மையும் ஆற்றலும், அதற்குள்ளாகவே போர்க் களம் விட்டுப் போக மறுத்தன. அவ்வுணர்வுகளுக்குக் கட்டுப் பட்டமையால், அவர் கால்களும் கட்டிப் போட்டனபோல் களத்திலேயே நின்றுவிட்டன. போரிடுவதிலேயே கருத்தினைப் போக்கினார்கள் போர் வீரர்கள்.

போர் புரிந்துகொண்டிருக்கும் அவர் கண்களில் பகையரசர்களின் வெண்கொற்றக் குடைகள் புலப்பட்டன. இவ் வெண்கொற்றக் குடையுடையானாகிய வேந்தன்மீது கொண்டுள்ள அன்பினால் அல்லவோ, அவ்வேந்தன் படையாளர் பேராற்றல் காட்டிப் போர் புரிகின்றனர் என்ற ஆத்திரம் ஒருபாலும், எம் வேந்தனுக்குரிய வெண்கொற்றக் குடைக்கு நிகராக விளங்குவதோ வேற்றரசர்தம் வெண்கொற்றக் குடையும் என்ற பொறாமை ஒருபாலும் உருக்கொண்டு எழ, இருதிறப் படைவீரரும், எதிர் எதிர் வரிசைகளில் விளங்கிய வெண்கொற்றக் குடைகள்மீது உரங்கொண்டு பாய்ந்தனர்.

பகையரசன் குடைமீது பாயுங்கால், பகைவர் படை வீரர், தம் அரசன் குடைமீது பாய்ந்து வருவது கண்டனர். அதனல் ஒரு சிலர் மேலே செல்வதை விடுத்துத் தம் வெண் கொற்றக் குடையினைக் காத்து நின்றனர். இதன் விளைவால் கடும்போர் மூண்டது. ஆயினும், இரு திறத்தவர் உள்ளத்திலும், ஊக்கமும், உரமும் உருத் தெழுந்து நின்றமையால் அவர் கருதியது நிறைவேறிவிட்டது. சோணாட்டு வெண் கொற்றக் குடையினைச் சேரநாட்டு வீரர்கள் வெட்டி வீழ்த்தினர். சேரநாட்டு வெண்கொற்றக் குடையினைச் சோணாட்டார் வெட்டி வீழ்த்தினர். ஆனல் அதே நிலையில், அவ்வெண் கொற்றக் குடைகளின் அருகே நின்று அவற்றைக் காத்திருந்த் வீரர் பலர், இரு திறத்திலும் உயிரிழந்து வீழ்ந்தனர்.

காம்பற்றுத் தலைகீழாக வீழ்ந்து கிடக்கும் வெண் கொற்றக் குடைகளில், இறந்து வீழ்ந்த வீரர்களின் சரிந்த குடர்கள் நிறைந்திருந்தன. அக்காட்சி, பருத்திப் பெண்டிரின் மனைமுன்றில்களில், அடித்துக் கொட்டை போக்கிய செம் பஞ்சினை இட்டு வைத்திருக்கும் கூடைகள் போல் காட்சி அளித்தது. அமைதியான வாழ்வு பெற்றுக் கண்ணுக்கினிய அக்காட்சிகளைக் காட்ட வேண்டிய நாடு, மன்னர்களின் போர் வேட்கையால், அமைதியிழந்து கண்கலங்கும் இக் கொடுங் காட்சியைக் காட்டுவது கண்டு கலங்கிக் கண்ணீர் சொரிகின்றார் புலவர் !

"மைந்து கால்யாத்து மயங்கிய ஞாட்பினுள்
புய்ந்து கால்போகிப் புலால் புகுந்த வெண்குடை
பஞ்சி பெய் தாலமே போன்ற; புனல் நாடன்
வஞ்சிக்கோ அட்ட களத்து." —களவழி: 29

## நெய்தல் இடையே வாளை பிறழும் வெள்ளம்

சோணாட்டு வாள் வீரரும் வேல் வீரரும் களம் புகுந்தனர். வாள் வீரர் குதிரைகள்மீது அமர்ந்து சென்றனர். குதிரைகள் நல்ல குதிரைகள். அவற்றின் தொழில் நலம்,

பிடரி மயிர் அழகாகக் கத்தரித்து விடப்பட்டிருந்த அவற்றின் தோற்ற நலத்திலேயே நன்கு புலப்பட்டது. அத்தகைய குதிரைகள்மீது அமர்ந்து செல்லும் வீரர் கையில் மின்னும் வாள்களும் வெற்றிபல கண்ட விழுச் சிறப்புடைய; பகைவர் உடல்களைப் பல்லாயிரக் கணக்கில் வெட்டி வெட்டி வீழ்த்தினமையால் பெற்ற அவற்றின் வெண்மை நிறம், அவர்கள் அவற்றை வலமாகவும் இடமாகவும் மாறிமாறித் திருப்புந்தோறும் விட்டு விட்டு ஒளி வீசிற்று. வேற்படையாளர் தேர் ஏறிச் சென்றனர். அத்தேர்களின் உச்சியில் சோணாட்டுப் புலிக் கொடி பெருமிதத்தோடு பறந்துகொண்டிருந்தது. சேரநாட்டு வேழப் படையின் தாக்குதலைத் தாங்க வல்ல திண்மை வாய்ந்திருந்தன அத்தேர்கள். அவற்றின்மீது அமர்ந்து செல்ல வீரர் ஏந்திய வேல்கள், பகைவர் படையைச் சேர்ந்த யானைகள் எண்ணிலாதனவற்றின் மீது, எண்ணற்ற முறை எறியப்பெற்றமையால், முனைகள் மிகமிகக் கூர்மையவாய் மின்னின.

இவ்வாறு ஏற்ற ஊர்திகளில் ஏற்புடைய படைக் கலங்களோடு களம் புகும் அவ்வீரர்களுக்கு ஓர் ஆசை உண்டாயிற்று. வளம் மிக்க அவர் சோணாட்டில் வெள்ளம் பெருக்கெடுத்துப் பாயும் கார்காலத்தில், ஏரி குளம் முதலாம் நீர் நிலைகளில் நீர் அளவிற்கு மேல் நிறைந்து போவதால், அவற்றின் கரைகள், அந்நீர்ப் பெருக்கைத் தாங்க மாட்டாமல் உடைந்துபோகும். அவ்வுடைப்புக்களின் ஊடே பாய்ந்து வெளிப்படும் செம்புனல் வெள்ளம், நன்செய்களை யெல்லாம் நீர் மயமாக்கி விடும். அவ்வாறு தேங்கி நிற்கும் செந்நீரின் இடையிடையே நெய்தல் மலர்கள் தலைகாட்ட வெள்ளம் கண்டு துள்ளும் வாளைகள் அவற்றைச் சூழ்ந்து சூழ்ந்து வரும். அவர்கள் நாட்டில் கண்டு மகிழ்ந்த அக்காட்சியை அக்களத்திலும் காணவேண்டும் என்று விரும்பினார்கள். வாள் கொண்டும், வேல் கொண்டும் கடும்போர் புரிந்தார்கள். கணப்பொழுதில் களிறுகள் பல உயிரிழந்து வீழ்ந்தன. வீழ்ந்த அவ்வேழங்களின் உடல்கள், பொய்கைக் கரைகளாக,

அவற்றின் உடல்களிலிருந்து ஒழுகி ஒன்று கலந்து தேங்கிப் பாயும் குருதி வெள்ளம், பொய்கையிலிருந்து புறப்பட்டுப் பாயும் புதுப் புனலாக, போரில் முறிந்து வீழ்ந்த வேல் முனைகளும் வாள் முனைகளும், நெய்தல்மலரும் வாளைமீனுமாக, களம் அவர்கள் காண விரும்பிய காட்சியைக் காட்டி விட்டது.

"பொய்கை உடைந்து புனல் பாய்ந்த வாயெல்லாம்
நெய்தல் இடைஇடை வாளை பிறழ்வன போல்
ஐது இலங்கு எஃகின் அவிர் ஒளிவாள் தாயினவே
கொய்சுவல் மாவின், கொடித் திண்தேர்ச் செம்பியன்
தெவ்வரை அட்ட களத்து." —களவழி. 33

## மலையில் பாய்ந்தேறும் புலி

யானைப் படையால் பெருமையுற்றது சேரர் படை. அப் படையைக் கொன்று களம் கொள்வது அவ்வளவு எளிதன்று. பகைவர் படை வீரர் எவ்வளவுதான் ஆரவாரம் செய்து கொண்டு வரினும் அது கண்டு அஞ்சாது அவ்வேழப் படை. பகைவர்களின் போர் முரசு எவ்வளவுதான் முழங்கினும் அது கேட்டு நடுங்காது அது. காற்றாலோ, மழையாலோ, கடும் இடியாலோ சிறிதும் கலங்குறாத மலைபோல், நிலை கலங்காது நின்று போரிடும் பேராண்மை வாய்ந்தது அவ்வேழப் படை.

பகைவனின் இப்படைப் பலத்தை அறிந்திருந்தான் செங்கணான். அதனால், அவ்வேழப் படையின் வலி கெடுக்கும் ஏற்பாடுகளோடு வந்திருந்தான். வேழப் படையை வென்று அழிக்கக் கூடியது, அது எதிர் பார்க்காத நிலையில், கண்மூடிக் கண் திறப்பதற்குள், விரைந்து பாயவல்ல குதிரைப் படைகளே என்பதை அறிந்திருந்தான் அவன். அதனால் குதிரைகளைப் பெருவாரியாகக் கொண்டு வந்திருந்தான். அதிலும் உள்ளத்தில் ஊக்கமும், உடம்பில் உரமும் மிக்க குதிரைகளையே தேர்ந்துகொண்டு வந்திருந்தான். அம்மட்டோ!

குதிரைகள் சிறந்தனவாய் அமைந்துவிட்டால் மட்டும் போதாது. அக்குதிரைகளைச் செலுத்தும் வீரரும், அவற்றைப் போரின் போக்கறிந்து செலுத்த வல்ல அறிவுடையராதல் வேண்டும். அவர்பால் அவ்வாற்றல் இல்லையேல், அக்குதிரைகளின் ஆற்றல் பயன் அற்றுப்போம் என்ற இப்போர் நுணுக்கங்களை அறிந்து அக்குதிரைகளின் விரைவினைத் தாங்கிக் கொண்டு, களத்தின் நிலைமையையும் கருத்தில் இருத்தி, கைப் படைகளைக் கையாளும் திறத்திலும் சிறந்த வீரர்களையே தேர்ந்து, அவர்கள்பால் அக்குதிரைகளை ஒப்படைத்திருந்தான்.

போர் தொடங்கிவிட்டது. மலைநாட்டு வேழப் படை, பாய்ந்து வரும் சோழப் படை ஒரு சிறிதும் மேல் நோக்கி வராதபடி, மலை வரிசைபோல் நின்று தடுத்துவிட்டது. அந் நிலை உண்டான உடனே, சோணாட்டுக் குதிரைப் படை விரைந்து களம் புகுந்தது. களம் புகுந்த குதிரைப் படை, ஊக்கமும் உரமும் மிகுந்து, ஊர்ந்து வரும் வீரர்களின் குறிப் பறிந்து விரைந்து சென்று, வேழங்களின் மத்தகத்தின்மீது, பாய்ந்து ஏறிற்று. அது எதிர்பாராது நிகழ்ந்துவிடவே, வேழங்கள் வெருண்டோடின.

நிலை கலங்காது நின்ற யானைகளின் அணிவகுப்பு மலை வரிசைபோல் தோன்ற, உரமும் ஊக்கமும் கொண்டு விரைந்து பாய்ந்த குதிரைகள், மலைமீது விரைந்து ஏறும் வேங்கைப் புலிகள்போல் காட்சி அளித்தன. மலைமீது புலி பாயும் காட்சியை நினைவூட்டும் அந்நிகழ்ச்சி, மலை நாட்டானாகிய சேரனைப் புலிக்கொடியானாகிய சோழன் வெல்வான் என்பதை முன்னறிவிக்கும் நிமித்தமாம் போலும்!

"பரும இனமாக் கடவித் தெரி மறவர்
ஊக்கி எடுத்த அரவத்தின் ஆர்ப்பு அஞ்சாக்
குஞ்சரக் கும்பத்துப் பாய்வன, குன்று இவரும்
வேங்கை இரும்புலி போன்ற, புனல்நாடன்
வேந்தரை அட்ட களத்து." —களவழி: 16

## மண்மகள் செம்மேனி :

சோழன்செங்கணன் செங்கோல் நெறி நின்று நாடாண்டிருந்தான். அவன் ஆட்சியில், என்றும் அறம் பொய்த்துப் போனது இல்லை. அதனால் அவன் நாட்டு மக்கள் அவனுக்கு மலர்மாலை சூட்டி வாழ்த்தினார்கள். அவன் அரண்மனை வாயிலில், மும்முரசுகளும் எக்காலத்தும் முழங்கின. நல்லாட்சியின் பயனாய் நாடு நிறைந்த மழைபெற்று நலம் உற்றது.

சோநாட்டின் இச்சிறப்புக்களை அறிந்தனர், சேரனும், அவன் படை முதல்வரும். அவர்க்கு அந்நாட்டின் நல்வாழ்வைக் காணக் காண, மனத்தில், பொறாமைத் தீ மூண்டது. காழ்ப்புணர்வு கிளைத்துப் படர்ந்தது. செங்கணன் நாட்டுச் செல்வ வாழ்வு கண்டு காய்ந்தனர். அதன் பயனாய்க் கழுமலப் போர் மூண்டது.

களத்தில் கணக்கற்ற உயிர்கள் மாண்டன. உயிரிழந்து வீழ்ந்த உடல்களிலிருந்து பெருகி ஓடிய செந்நீர் வெள்ளத்தால் கழுமலக்களம் செங்களமாய் மாறிக் காட்சி அளித்தது. அக்களக் காட்சியையும், அக்களப்போர்க் காரணத்தையும் காண்பவர் உள்ளத்தில் ஓர் உயர்ந்த கருத்து உருப் பெறச் செய்தது களத்தின் அச்செந்நிறம்.

சோநாடு வளம் பெற்றுளது. சோநாட்டு மன்னன் வாழ்த்தப்பெறுகிறான் என்பது உண்மை. அந்நிலை அவன் நாட்டு மண்ணுக்குமட்டும் உள்ள தனிச் சிறப்பன்று. அது எந்நாட்டு மண்ணுக்கும் உண்டு. ஆனால் அது அம்மண்ணின் நலத்தால் மட்டும் வந்ததன்று. அது அவன் அரசியல் அறவாழ்வால் வந்தது. அந்நாட்டு மக்கள் தங்கள் கடமையுணர்ந்து தொழிலாற்றுவதால் வந்தது. சேரர், இதைச் சிந்தையில் இருத்திச் செயல் புரிந்திருந்தால், அவர் நாடும் அந்நலம் பெற்றிருக்கும். அவர் நாட்டு மண்ணும் அம்மாண்பு பெற்றிருக்கும். ஆனால் நாட்டு மண்ணிடத்தில் மட்டும் நலம் இருந்து பயன் இல்லை. நாட்டு மக்கள் நினைப்பிலும் நலம்

இருத்தல் வேண்டும். அந்நலத்தை இழந்துவிட்டார்கள் சேரர். சோணாட்டின் நலம் கண்டு காய்ந்தனர். இறுதியில் உள்ள நலமும் போயிற்று. சேரரின் இந்நினைப்புக் கேட்டால், இருவர் நாட்டு நலங்களும் நலிவுற்றன.

இதைக் கண்டாள் நிலம் என்னும் நல்லாள். "நலம் அளிக்க நான் இருக்க, என்பால் நல்லற நெறி நின்று தொழி லாற்றிப் பயன் பெருது, காய்தலைக் கருத்தில் கொண்டு களம் புகுந்து, அந்தோ தாமும் கெடுகின்றனர்; பிறரையும் கெடுக் கின்றனர்; என்னே இவர்தம் கெடுமதி!" என்று எண்ணினுள். அவரைக் காணவும் நாணினுள் ஒருபுறம்; மாருச் சினம் கொண்டாள், மறுபுறம். உடனே நெந்நிறப் போர்வை ஒன்றை எடுத்துத் தன் உருத்தெரியாவாறு போர்த்துக்கொண் டாள். அக்காட்சியே, களக் காட்சியைக் காண்பவர் கருத்தில் தோன்றிற்று.

> **"மை இல் மாமேனி நிலம் என்னும் நல்லவள்**
> **செய்யது போர்த்தாள் போல் செவ்வந்தாள்—பொய்தீர்ந்த**
> **பூந்தார் முரசின் பொருபுனல் நீர் நாடன்**
> **காய்ந்தாரை அட்ட களத்து."** —களவழி : 32

## குன்றின்மேல் குருவிக்கூட்டம் :

கொம்புள்ளவற்றிற்கு ஐந்தும், குதிரைகளுக்குப் பத்தும் என்ருல், யானைகளுக்கு ஆயிரம் முழம் இடைவெளி வேண்டும் என்று கூறுவார்கள் அறிந்தவர்கள். நன்கு பழக்கப் பெற்று நாட்டு மக்களிடையே கலந்து வாழக் கற்றுக்கொண்ட யானைக்கு, அதுவும், அது மதம் படாத காலத்தில் கூறிய வரை யறை இது. அது மதம் பட்டுத் திரியும் காலத்தில் ஓராயிரம் ஆருயிரமாக நீளவேண்டி நேரிடும். போர்க்களம் புகாத யானைக்கே இது என்ருல், போருக்கு என்றே பழகிய யானை களுக்கு, போரில் பேராற்றல் காட்டிப் போரிட வேண்டும் என்ற கருத்தோடு, வெறியூட்டி விடப்பட்ட நிலையில், அவற் றின் கண்ணில் படாத இடத்தில் இருப்பதே நன்று. போர்

யானை ஒன்றிற்கே இல்லை என்றால், அத்தகைய யானைகள் எண்ணிலாதன களம் புகுமாயின், பகைவர் படை எங்கே நிற்கவேண்டும் என்று அறிந்து கூறவே முடியாது. அவ்வளவு நெடுந்தொலைவில் அது நிற்பதே நலம் பயக்கும்.

சேரநாட்டுப் படையில் யானைகளே அதிகம். படை வரிசையின் முன்னிலையில் அவைகளே அணிவகுத்து நிற்கும். இதை அறிந்தும் சோழர் படைக் களம் புகுந்துளது. களம் புகுந்த படை நெடுந்தொலைவில் நின்று தம்மைக் காத்துக் கொள்ளவேண்டும்; சேரரின் யானைப் படை நிற்கும் அணியை அணுகாமல், பிற படை நிற்கும் இடம் சென்று போரிட வேண்டும். என்று கருதிற்றோ என்றால் அதுவும் இல்லை.

சேரனைச் சிறைபிடிக்க வேண்டுமாயின், அவன் வேழப் படையையே முதலில் வெற்றிகொள்ளுதல் வேண்டும். அதனால் சோணாட்டுப் படை, அவ்வேழப் படை வரிசையினையே வளைத்துக்கொண்டது. சோழர் படையாளர்க்கு அவ்வளவு நெஞ்சத்துணிவு உண்டானதற்குக் காரணம், அப் படை தன் அங்கமாக, விற்படை அணி ஒன்றைப் பெற்றிருந்த தேயாகும். வேழங்களை அணுக வேண்டியது இல்லாமலே, அவை நிற்கும் இடத்திற்கு நெடுந்தொலைவில், அவற்றில் கேடு விளைவிக்கக்கூடிய எல்லைக்கு அப்பால் இருந்தவாறே, தம் வில்லாற்றலால், அவ்வேழப் படையைக் கொன்றழிக்கவல்ல வில்லாளர் பலர், அப்படையில் இடம் பெற்றிருந்தனர் அதனால் சோழர் படை, சேரர் வேழப் படை கண்டு அஞ்சாமல் களம் புகுந்தது.

களம் புகுந்த வில்வீரர், விற்களை வளைத்து, அம்புகளை மழைத்தாரைகளென மளமளவென ஏவினர். விற்களிலிருந்து வெளிப்பட்ட அம்புகள் விரைந்து சென்று, வேழங்களின் உடலில் குறி தவறாமல் ஆழப் புதைந்தன. ஓர் அம்பாலோ, ஈர் அம்பாலோ வேழங்களின் உரம் அழிந்துவிடாது என்பதை வில்வீரர் அறிந்திருந்தமையால், எண்ணிலா அம்புகளை எடுத் தெடுத்து ஏவிக்கொண்டே இருந்தனர், யானைகளின் உடலில்

இனி இடம் இல்லை எனக் கூறுமளவு அவற்றின் உடல்களில் அம்பு தைக்குமளவு ஓயாது ஏவிக்கொண்டே இருந்தனர். இனியும் நின்று போரிடுவது இயலாது என்ற நிலை பெற்று, நிலைகுலைந்து ஒன்றின் உடல் ஒன்றுமீது சாயும்வரை அம்பேவிக்கொண்டே இருந்தனர்.

இறுதியில் அம்பேறுண்ட யானைகள் நிலைகலங்கி அழிந்தன. ஒன்றையொன்று அடுத்து நிற்கும் மலைக்குன்றுகள் போல் காட்சியளிக்கும்படி, ஒன்றன்மீது ஒன்ருக வீழ்ந்து இறந்து கிடந்தன. அம்புகளின் முன்பாதி அழுந்திக் கிடக்க, பறவைகளின் இறகுபோலும் மறுபாதி புறத்தே வெளிப்பட்டுத் தோன்றிக் கிடக்க, யானைகள் வீழ்ந்து கிடக்கும் காட்சி, காண்பவர் உள்ளத்தில் மலைநாடாகிய சேர நாட்டில், மாலைப்பொழுதில் மனை திரும்பிய குருவிக்கூட்டம், எள்விழ இடம் இல்லாதபடி நெருங்க அமர்ந்திருக்கும் நெடிய மலைக் காட்சியை நினைப்பூட்டுவதாய்த் தோன்றிற்று. தோன்றவே, மனம் மகிழும் அம்மலைக் காட்சியைக் கண்டு களித்த கண்களால், கலங்கிக் கண்ணீர் சொரியவேண்டிய இக்கொடுங்காட்சியைக் காண நேர்ந்ததே என எண்ணிக் கண்ணீர் சொரிந்தனர்.

> **"யானைமேல் யானை நெரிதர, ஆனுது**
> **கண்ணோ கடுங்கணை மெய்ம்மாய்ப்ப—எவ்வாயும்**
> **எண்ணருங் குன்றில் குரீஇயினம் போன்றவே**
> **பண்ணார் இடிமுரசின் பாய்புனல் நீர்நாடன**
> **நண்ணுரை அட்ட களத்து."** —களவழி ; 8

## புயல் புகுந்த பனந்தோப்பு :

படையால் பெருமை பெற்றனர் சோழர். அவர் படைப் பெருமையைப் பாராட்டவந்த ஒரு புலவர், "முன்னே தேர்ப் படைசெல்ல, எல்லாவற்றிற்கும் இறுதியில், வில்வீரரும், வாள் வீரரும், வேல்வீரரும் ஆகிய வீரர்கள் செல்ல, இவ்வாறு வரிசை வரிசையாகச் செல்லும் அப்படை, இடைவழியில் ஒரு பனந்

தோப்பைக் கடந்து செல்ல வேண்டி வந்தால், படைக்குத் தலைமை தாங்கிச் செல்வோர், அப்பனந் தோப்புள் நுழையும் காலத்தில், நுங்குக் காலமாய் இருந்து, அவர்கள் நுங்குத் தின்று சென்றால், படையின் இடை நிலையில் உள்ளார் அத் தோப்பைக் கடக்கும் காலம் பழக் காலமாய் மாறிவிடும் ஆதலின், அவர்களுக்கு நுங்குக் கிடைக்காது; பழமே கிடைக் கும்; படையின் கோடியில் வருவார் ஆங்கு வரும் காலத்தில், பழமும் அற்றுப்போய்க் கிழங்குக் காலமே வந்துவிடும் ஆதலின், அவர்கள் கிழங்கே தின்பர்" என்று கூறியுள்ளார். அவர் கூறியதை வைத்து நோக்கினால், படையின் முன் வரிசை யில் செல்வார் கடந்து சென்ற ஓர் இடத்திற்குப் படையின் இறுதியில் இருப்பவர் வந்துசேரக் கிட்டதட்ட ஒன்பது திங்கள் ஆகும். அங்ஙனமாயின், சோழர்படை எவ்வளவு பெரிது என்பது புலனும்.

அப்படை அளவால்மட்டும் பெரிதன்று. ஆற்றலாலும் பெரிது அப்படை. இயல்பாகவே மறவர் குடியில் பிறந்தவர் களையே கொண்டது அது. தேரில் அமர்ந்தும், யானையைச் செலுத்தியும், குதிரை ஊர்ந்தும் களம் கலங்க ஓடியும் போரிடும் அம்மறவர் அனைவரும் பெரிய பெரிய படைக் கலங் களைத் தளராது தாங்கிப் போரிட வல்ல திண்மை வாய்ந்த தோள் படைத்தவராவர். அத்தகையார்களைக் கொண்ட சோழர் பெரும் படையே கழுமலப் போரில் கலந்து கொண்டது.

சோழர் படை வீரர்க்கு ஓர் ஆசை. அவர்கள் கழுமல நகர் நோக்கி வருங்கால், இடை வழியில் நுழைந்து வந்த பனந்தோப்பில் புயல் காற்றுப் புகுந்து கடுமையாக வீச, அதன் கடுமைக்கு உள்ளாகிய பனைமரங்கள் பேயாட்டம் ஆடிக் காய்களைப் பறிகொடுக்க, உதிர்ந்த காய்கள் அத் தோப்பு நிறைய உருண்டு கிடந்த காட்சியைக் கண்டு வந் தார் போலும். அதனால் அது போலும் காட்சியைக் களத் திலும் காண வேண்டும் என்று எண்ணிவிட்டார்கள், அவ்

வளவே, வாள் எடுத்துக் களம் புகுந்தார்கள். சேரநாட்டு வீரர் தலைகளை வெட்டி உருட்டினார்கள். தலை இழந்த முண்டங்கள், பனை மரங்கள் போல் ஆங்காங்கே அசைவற்று நிற்க, கரிய மயிர் முளைத்த தலைகள், காய்கள்போல் களமெங்கும் உருண்டு கிடந்தன. அக்காட்சி, அப்பனந்தோப்புக் காட்சியை அப்படியே காட்டிவிட்டது.

நுங்காகவும், பழமாகவும், கிழங்காகவும் பயன்பெற வேண்டிய காய்களைக் கொடிய காற்றுக் குலைத்துக் கெடுத்தது போல், பாடுபட்டும் பயன் விளைக்க வல்ல வீரர் தலைகள், அந்தோ! கொன்னே கொய்யப் பெற்றன. என்னே கொடுமை!

> "திண்தோள் மறவர் எறியத், திசைதொறும்
> பைந்தலை பாரில் புரள்பவை—நன்கு எனைத்தும்
> பெண்ணை அம் தோட்டம் பெருவெளி புக்கற்றே,
> கண்ணார் கமழ்தெரியல் காவிரி நீர் நாடன்
> கண்ணுரை அட்ட களத்து."                —களவழி : 24

## கந்தில் பிணித்த கோணுய் :

கழுமலக் கோட்டைக்கான இறுதிப் போர் நடைபெற்றுக் கொண்டுளது. இரு திறத்துப் படைவீரரும் இரண்டறக் கலந்து கடுமையாகப் போரிட்டுக் கொண்டுள்ளனர். தேரோடு தேர் போராடித் தீர்த்தது. களிற்றுப் படையைக் கொன்று தீர்த்தது குதிரைப்படை. குதிரைப் படையும் கள வெற்றியைக் காணக் கொடுத்து வைக்கவில்லை. இறுதியில் எஞ்சியுள்ள இருபடை வீரர்களும் போரிட்டுக் கொண்டுள்ளனர். அவர்களும் வில்லாற்றல் வாளாற்றல்களை யெல்லாம் காட்டிப் போரிட்டுக் கடைசியில்,வேலேந்திப் போரிடத் தொடங்கினர்.

களத்தில் வீசிய பிணவாடை, கழுமல நகரை அடுத்திருந்த காட்டில் வாழும் குள்ளநரிகளை விருந்துக்கு அழைத்ததுபோல் ஆகிவிட்டது. ஒரு பெரிய கூட்டம் வந்து களத்தைச் சூழ்ந்துகொண்டது. போர் எப்போது ஓயும், பிணங்

களைப் பிடுங்கித் தின்னலாம் எனக் காத்துக் கிடந்தது. அந் நிலையில் போரும் ஒருவாறு ஓய்ந்தது. சோணாட்டு வீரர்கள் வீசிய வேற்படைகள், சேரநாட்டு வீரர்களின் உடலில் பாய்ந் தன. அவர் குடர்களைச் சரித்துவிட்டு அங்கேயே அசைக்க முடியாதபடி ஆழமாகப் பதிந்துவிட்டன. அதற்கு மேலும் எதிர்த்து நிற்கமாட்டாத சேரர் படை புறமுதுகிட்டது.

உடனே களத்தில் புகுந்தன குள்ளநரிகள். அவற்றுள் சில, வேல் தைத்து வீழ்ந்து கிடக்கும் வீரர்களின் சரிந்த குடர் களைக் கவ்வி இழுத்தன. வீரர்களின் உடல் உரம் மிக்க உடலாதலின், அக்குடர்கள் எளிதில் அறுபடவில்லை. ஆயினும் அவற்றை விடாது பற்றி ஈர்த்துக்கொண்டேயிருந்தன குள்ளநரிகள்.

அது நிகழ்ந்துகொண்டிருக்கும் போதே, சேரமான் கணைக்கால் இரும்பொறையின் கைகளில் விலங்கை மாட்டி, அச்சங்கிலியைத் தேர்க்கம்பத்தில்கட்டினார்கள் சில, வீரர்கள். அதைக் கண்ட சிலர்க்கு, அந் நினைப்பே அவர் நெஞ்சில் நிலை பெற்றுவிட்டமையால், வேற்படைகள், தம் காம்புகள் வெளியே தோன்றும்படி தைத்திருக்க, அவற்றால் சரிந்த குடர்களை ஈர்த்துக் கொண்டிருக்கும் குள்ளநரிகள், வேட்டை விரும்பும் வீரர் மனைக்கம்பங்களில், கழுத்தில் சங்கிலி மாட்டி வரிசை வரிசையாகக் கட்டி வைத்திருக்கும் வேட்டை நாய்கள் போல் காட்சி அளித்தன. என்னே களக் கொடுமை!

"இணரிய ஞாட்பினுள் ஏற்று எழுந்த மைந்தர்
சுடர்இலங்கு எஃகம் எறியச், சோர்ந்து உக்க
குடர்கொண்டு வாங்கும் குறுநரி, கந்தில்
தொடரொடு கோணாய் புரையும், அடர்பைம்பூண்
சேய் பொருது அட்டகளத்து" —களவழி : 34

## மருண்டோடும் மயில் கூட்டம் :

சோணாட்டுத் தலைநகரை அடுத்த ஒரு மலர்ச் சோலையில், ஒருநாள் மாலை, சோழன் செங்கணான் உலவிக் கொண்டிருந் தான். அம்மலர் வனத்தின் வனப்புக்களைக் கண்டு மகிழ்ந்து

வந்தவன் ஓரிடத்தில் மயிற்கூட்டங்கள், தம் தோகைகளை விரித்து ஆடிக்கொண்டிருப்பதைக் கண்ணுற்றான். கார் மேகத்தின் வரவுகண்டு பெற்ற களிப்பால் அம்மயில்கள் ஆடும் நடனத்தில் தன் நெஞ்சைப் பறிகொடுத்து விட்டான். அது சிறிது நேரமே. சிறிது நாழிகைக்கெல்லாம் ஒரு பெரும் புயற்காற்று எழுந்தது. மரக்கிளைகள் மளமளவென ஒடிந்து வீழ்ந்தன. 'ஓ' என்ற பேரிரைச்சல் எழுந்தது. அவ்வளவே, மயில்களின் மகிழ்ச்சி எங்கோ மறைந்து விட்டது; அவற்றின் உள்ளத்தில் அச்சம் குடிபுகுந்து கொண்டது; உடனே மூலைக்கு ஒன்றாக ஓடத் தொடங்கி விட்டன.

மயிலின் ஆட்டம் கண்டு மகிழ்ந்த மன்னவன், அவற்றின் ஓட்டம் கண்டு உள்ளம் துடித்தான். அந்நிலையில் ஓடோடி வந்தான் ஓர் ஒற்றன். கழுமலக் கோட்டையில் சேரர் படை திரட்டுவதைத் தெரிவித்தான். சோழன் சினம் கொண்டான்; அவன் கண்கள் சினத்தால் சிவந்தன; அவன் வாயிலிருந்து வெளிப்பட்டது ஒரு வஞ்சினம். "என்மீது படை கொண்டு எழுந்த மலை நாட்டு மாவீரரின் மனைவியர், புயல் கண்டு அஞ்சி ஓடும் இம்மயிற்கூட்டம்போல், தம் கணவரை இழந்த கொடுமை கண்டு அலறித் துடித்து அழும்படி செய்யேனாயின், என் அரசு அழிக" என அறிவித்து விட்டு, அன்றே சேரநாடு நோக்கிப் படையைச் செல்ல விட்டான்.

கழுமலக் கோட்டையை வளைத்துப் போரிட்டான். கணக்கற்ற வீரரை வீழ்த்தினான். வெற்றி கண்டான். எடுத்த சூளையும் முடித்தான். கணவரை இழந்த சேர நாட்டுச் செல்வியர் சிந்தை நொந்து, செய்வதறியாது, அலறிப் புடைத்துக்கொண்டு ஓடோடி வந்து, களம் புகுந்து ஓலம் இட்டனர். அக்காட்சி கண்டு களித்தது செங்கணான் உள்ளம். என்னே அப்போர் வெறி!

**"கடிகாவில் காற்று உற்று எறிய, வெடிபட்டு**
**வீற்று வீற்று ஓடும் மயில் இனம்போல்—நாற்றிசையும்**
**கேளிர் இழந்தார் அலறுபவே, செங்கண்**
**சினமால் பொருத களத்து"** —களவழி: 29

# 6. போரின் பின் விளைவு

கைப்பற்றிய கணைக்கால் இரும்பொறையோடு உறையூர் வந்து சேர்ந்தான் செங்கணான். போரில் தோற்ற பகையரசர்களைக் கைப்பற்றிச் சிறை வைக்கும் போதும், அவர் அரசர் என்பதை மறவாது, மதிப்போடே நடத்துதல் வேண்டும் என்ற தமிழரசர்களின் போர் அறப் பண்பினை அறியாதவனல்லன் செங்கணான். ஆயினும், படைத் தலைவன் பழையனை இழந்த துன்பம் அவன் உள்ளத்தில் பசுமையோடிருந்தது. வென்று துரத்த முடியாத கொங்கரை வென்று துரத்திய வேற்படை மிக்க அவ்வீரனை, ஆறு படைத் தலைவர்களை, ஒரே களத்தில் அழித்துக் கொன்ற ஆற்றல் உடைய அவ்வீரனைக் கொன்றவன் கணைக்கால் இரும்பொறை என்பதால், செங்கணானுக்கு அவன்பால் கொண்ட சினம், அவன் சிறையுற்ற பின்னரும் தணிந்திலது. அவனை அவன் வாழ்நாள் முழுதும் சிறையில் வைத்துச் சிறுமை செய்யவேண்டும்; பழையனைக் கொன்றமைக்குப் பழி தீர்த்துக்கொள்ள வேண்டும் என்ற எண்ணமே செங்கணான் உள்ளத்தில் தலைதூக்கி நின்றது. அதனால், அவனைக் குடவாயில் என அழைக்கப்பெறும் கும்பகோணத்திற்குக் கொண்டு போகும்படி ஆணையிட்டான். சோணாட்டுப் பெரிய சிறை அங்கு இருந்தது. அரிய காவல் உடையது. அழிக்க முடியாத அரண் பெற்றது. அதனுள் அடைக்கப்பெற்றவர் எவ்வளவு முயன்றாலும், வெளியேறிப் பிழைத்துப் போவதோ, வெளியார் எவ்வளவு பெரும்படை கொண்டு வளைத்துக்கொண்டாலும், அகத்தில் அடையுண்டு கிடப்பாரை விடுதலை செய்துகொண்டு போவதோ இயலாது. அஃது அவ்வளவு அரிய காப்புடைமையால், சோழர்கள், தம் அரச செல்வங்களை அக்கோட்டைச் சிறைக்குள்ளேயே வைத்திருந்தனர். மகள் உள்ளத்தில் காதல் அரும்பு மலரத் தொடங்கிவிட்டது என்பதை அறிந்த ஒரு தாய், அம்மகள், அதனால் கெட்டழிந்துவிடக் கூடாது எனும் கருத்துடையளாகி, அவள் வீட்டைவிட்டு வெளிச் செல்

லாமை குறித்து ஏற்படுத்தும் கட்டும் காவலும், எவ்வளவு அழிக்கலாகா ஆற்றல் உடைய ஆகுமோ, அவ்வளவு ஆற்றல் வாய்ந்தன, குடவாயிற் கோட்டத்துக் கட்டும் காவலும் எனக் கூறியுள்ளார், அவ்வூரில் வாழ்ந்திருந்த புலவர் ஒருவர்*

அந்தக் குடவாயிற் கோட்டத்துச் சிறையில், சேர நாட்டுக் கொற்றவனை அடைத்த பின்னரே, செங்கணான் உள்ளம் சினம் ஆறிச் சிறிதே அமைதியுற்றது.

கழுமலப் போர் முடிவையும், கணைக்கால் இரும்பொறை சிறைப் பட்டதையும் கேட்டார் புலவர் பொய்கையார். தம் புலமைப் பெருமையை நிலைநாட்டுவான் வேண்டி, ஒவ்வொரு நாடாக, ஒவ்வொரு நகராகச் சென்றுகொண்டிருந்தமையால் கணையனின் கழுமலப் போர் முயற்சியை அறிந்திலர். அறிந்திருந்தால், அது நிகழாவாறு தடுத்திருப்பர். அவர் அதை அறிந்துகொள்ள வாய்ப்பு இல்லாமல் போனமையால், கழுமலப் போர் நிகழ்ச்சியை அவரால் தடுத்தல் இயலாது போயிற்றே, அல்லது, அதை அறிந்தும், மூவன் போன்ற பெருவீரனையே வென்று, அவன் வெண்பற்களைத் தன் தொண்டி நகர்த் தலைவாயில் கதவில் அழுத்தி வைத்த மாவீரனாகிய கணையன் தோல்வி காணான் என்ற நம்பிக்கையால், அவர் அவன் முயற்சியைத் தடுத்திலரோ அறியோம். போர் நிகழ்ந்துவிட்டது. அவனும் சிறைபுகுந்துவிட்டான்.

அது கேட்கவே அவர் ஆறாத்துயர் உற்றார். கெட்ட காலை விட்டோடும் கொடுமையை அவர் உள்ளம் அறியாது. நண்பனை அவன் செல்வக்காலை விட்டு வாழினும், அவன் அல்லற்காலை அகலுதல் கூடாது எனக் கருதும் ஆழ்ந்த நட்புணர்வு உடையவர் புலவர். பெருஞ்சோறு அளித்துத்

---

* "வென்வேல், கொற்றச் சோழர் குடந்தை வைத்த
நாடுதரு நிதியினும் செறிய
அருங்கடிப் படுக்குவள் அறன்இல் யாயே"
—அகநானூறு: 60

தம்மைப் புரந்த அக்காவலனுக்குச் சோழன் அமைத்திருக்கும் காவலை அகற்றி, அவனை மீண்டும் அரியணையில் அமர்த்தி மகிழவேண்டும் என்று விரும்பினார் புலவர்.

செங்கணானை அவர் அதற்குமுன் அறியார் ஆயினும், அவன் இயல்பு யாது என்பதை அவர் கேட்டிருந்தார். "புலவர்கள்பால் பெருமதிப்பு உடையவன்; அவர் கூறும் அறவுரைகளைப் பொன்னேபோல் ஏற்றுப் போற்றும் பேருள்ளம் உடையான். அவனுக்குக் கணையன்பால் வந்த சினமெல்லாம், கணையன் அவன் பகைவராகிய கொங்கரைத் தன் படைத் துணைவராகக் கொண்டான் என்ற அவ்வொரு நிகழ்ச்சிக்கே; கணையன்மீது அவனுக்கு நேரான பகை கிடையாது; ஆகவே, அக்கொங்கர் அறவே அழிவுற்றுப் போன இந்நிலையில் அவன் சினமும் சிறிது ஆறியிருக்கும். இந்நிலையில் அவன்பால் என்போலும் புலவர்கள் சென்று வேண்டினால், அவன் கணையனைச் சிறைவீடு செய்ய மறுக்கான்" என்று நம்பினார். நம்பியவாறே, செங்கணானைச் சென்று காண அப்போதே புறப்பட்டார்.

அந்நிலையில், புலவர் உள்ளத்தில், மற்றும் ஒரு புதிய உணர்வு உருப்பெற்றது. செங்கணான், தம் வேண்டுகோளைச் செவிமடுக்க வேண்டுமாயின், அவனுக்குத் தம்பால் ஒரு பற்று உண்டாதல் வேண்டும். அது உண்டாக வேண்டுமாயின், அவன் உள்ளம் உவக்கும் ஒன்றைத் தாம் செய்தல்வேண்டும். அரசர்கள் புகழ் விரும்புபவர்கள். பிற புகழினும், வெற்றிப் புகழையே பெரிதும் விரும்புவார்கள். ஆகவே எந்த நிகழ்ச்சியால் பெற்ற மகிழ்ச்சி, அவன் மனத்தில் மண்டிக் கிடக்கிறதோ, அம்மகிழ்ச்சி மேலும் மிகும்படி செய்தல்வேண்டும். அவன் கழுமலப் போரில் பெற்ற வெற்றியைப் பொருளாகக் கொண்டு, பாக்கள் பல பாடி அவனைப் பாராட்ட வேண்டும். அவை கேட்டு, அவன் தம்பால் பற்றுக்கொள்ளும் அந்நிலை நோக்கி, நண்பன் விடுதலைக்கு வழி காணுதல் வேண்டும் என்று கருதினார்.

அக்கருத்து எழவே, உறையூர்ப் பெருவழியில் சென்ற அவர் போக்கு, கழுமல நகர் நோக்கிச் செல்லும் நீண்ட வழியில் சென்றது. கழுமலப் போர்க் காட்சியைக் கண்டார். கலங்கிற்று அவர் உள்ளம். கண்கள் நீர் சொரிந்தன. அந் நெகிழ்ந்த உள்ளத்தோடு, தம் புலமை உணர்வையும் ஒன்று கூட்டினர். உருப் பெற்றன நாற்பது உயிரோவியங்கள். களவழி நாற்பது எனப் பிற்காலத்தவரால், தொகுத்து வரிசை செய்யப்பெற்ற அப்பாக்கள் நாற்பதும், நவில்தொறும் நயம் பயக்கும் நலம் உடையவாய் அமைந்தன.

உயிரோவியங்கள் நாற்பதும் எழுத்துருவம் பெற்றன. உடனே அவ்வேட்டோடு, புலவர் பொய்கையார் உறையூர் அடைந்தார். பொய்கையார் தன் பகைவன் நண்பர் என் பதைச் செங்கணன் நன்கு அறிவான். ஆயினும், அவன் உள்ளத்தில், வழிவழியாக வந்து ஊறிக் கிடக்கும் தமிழ்ப் பற்று, அவரை வரவேற்று, வழிபாடாற்றத் தூண்டிற்று. புலவர்க்குரிய பெருமையோடு வரவேற்றான். வழிநடை வருத்தம் தீர அவர் விரும்பும் உணவளித்து ஓம்பினன். புலவர்க்கு உடல் தளர்ச்சி போயிற்று, ஆனல், உள்ளத் தளர்ச்சி போகவில்லை. அது தீர்த்துக்கொள்ள வேண்டிய சமயத்தை ஆர்வத்தோடு எதிர்நோக்கி, அவன் அரண் மனையில் காத்துக் கிடந்தார்.

அரசியல் பணிகளை முடித்துக்கொண்டு, செங்கணன் புலவர் பக்கத்தில் வந்து அமர்ந்தான். உடனே புலவர் தம் கடமையைச் செயல்படுத்தத் தொடங்கிவிட்டார். ஏட்டை மெல்ல அவிழ்த்தார். ஒவ்வொரு பாட்டாகப் பாடிப் பொருள் உரைக்கத் தொடங்கினர். தமிழ் அறிந்தவன் செங்கணன். அதனல், அப்பாக்களில் பொதிந்து கிடக்கும் பொருட் சிறப்பு, சொற் சிறப்பு, ஒலிச் சிறப்பு ஆகிய நயங்களை நுகர்ந்து நுகர்ந்து இன்புற்றான். ஒவ்வொரு பாட்டும், அவன் உள்ளத் தில் ஊற்றெடுத்துப் பாயும் இன்ப வெள்ளத்தை அதிகப் படுத்திக்கொண்டே வந்தது. இறுதிச் செய்யுளைப் பாடி

முடித்தார் புலவர். அரசன் இன்பத்தின் எல்லையைக் கண்டு விட்டான். தன் நாடு நலம் அனைத்தும் அந்நாற்பது பாக் களில் ஒரு பாவிற்கே ஈடாகாது என உணர்ந்தான். அத் தகைய பாக்கள் நாற்பது பாடிய புலவர்க்கு எதையும் அளிக் கலாம், எவ்வளவு வேண்டுமாயினும் அளிக்கலாம் என்றது அவன் உள்ளம்,

அரசனின் அவ்வுள்ள உணர்வை உணர்ந்து கொண்டார் புலவர். இருக்கை விட்டு மெல்ல எழுந்தார். அரசனை அன்போடு விளித்தார். தம் இரு கைகளையும் விரித்து நீட்டி, "வேந்தே! என் உள்ளம் விரும்பும் ஒருபொருளை வேண்டிப் பெறவே உன்பால் வந்தேன். உன்னால் கொடுக்கக் கூடியதே அப்பொருள். அதை அளிக்கும் அருள் உள்ளம் உனக்கு உண் டாதல் வேண்டும்" என்று தன் மன வேட்கையை மெல்ல வெளிப்படுத்தத் தொடங்கினார். புலவர் கேளா முன்பே, அவர் விரும்புவது எல்லாம் கொடுக்கத் துடிக்கும் உள்ள முடையனாகிய அவன் அவர் வாய் திறந்து கேட்பதை மறுப்பனோ? அவர் வேண்டுகோள் அவன் காதில் வீழ்ந்ததோ இல்லையோ, "பெருந்தகையீர்! தாங்கள் என்பால் பெற வேண்டுவது எதுவேயாயினும் மனம் உவந்து தருவேன்; தயங்காது கேளுங்கள்" என்று தன் இசைவினை அளித்தான். உடனே புலவர், "அரசே! கழுமலப் போரில் உன்னால் சிறை செய்யப்பெற்ற காவலன், கணைக்கால் இரும்பொறை, என் நண்பன்; என்னைப் பல்லாண்டு புரந்தப் பெரிய வள்ளல். மானம் முதலாம் மாண்பு நிறை குணங்கள் உடையான். அத்தகையான் சிறையுண்டிருப்பது காண என் சிந்தை நைந்து உருகுகிறது. அவன் விடுதலையில் என் உயிர் வாழ்வு தங்கி யுள்ளது. இதுவே உன்பால் வேண்டுவது" என்று கூறினார்.

புலவர், தம் வறுமை தீரப் பொன் கேட்பார், பொருள் கேட்பார், நாலுகாணி நிலம் கேட்பார்; நாட்டு வருவாயில் பங்கு கேட்பார் என எதிர்நோக்கிய செங்கணான், அவர் தம் நலத்தை நாடாது, தம் நண்பன் நல்வாழ்வு குறித்து வேண்டுவது கண்டான். அவர் புலமையின் பெருமை கண்டு

அவர்பால் கொண்ட மதிப்பினும், தமக்கென வாழாது, பிறர்க்கென வாழும் அவர் பேருள்ளம் கண்டுகொண்ட மதிப்புப் பெரிதாயிற்று. அந்நிலையே அவன் உள்ளம் நெகிழ்ந்தது. கணைக்கால் இரும்பொறைபால் கொண்டிருந்த காழ்ப்பு, கணப்பொழுதில் மறைந்துவிட்டது. அவனை விடுதலை செய்ய இசைந்தான். புலவரையும் உடனழைத்துக் கொண்டு, குடவாயிற் கோட்டத்திற்கு அப்போதே விரைந்து சென்றான்.

புலவர் பாடிய செந்தமிழ்ப் பாக்கள்மீது கொண்ட பற்றுள்ளத்தால், கணையன் தன் குலப் பகைவர்க்குத் துணை புரிந்தவன், தன் படைத் தலைவன் பழையனைக் கொன்ற பெரிய பகைவன் என்பதையெல்லாம் மறந்து, அவனை விடுதலை செய்ய முன் வந்த செங்கணான் தமிழ் உள்ளம் கண்டு உலகம் அவனைப் பாராட்டிற்று. அப்பாராட்டுரைகளுள் சில வருமாறு :

"பொய்கை களவழி நாற்பதுக்கு
வில்லவன் கால்தளையை விட்டகோன்."

—இராசராச சோழன் உலா.

"பொறையனைப் பொய்கை கவிக்குக்
கொடுத்துக் களவழிப்பாக் கொண்டோன்."

—குலோத்துங்கச் சோழன் உலா.

"இன்னருளின்
மேதக்க பொய்கை கவி கொண்டு, வில்லவனைப்
பாதத் தளைவிட்ட பார்த்திபன்."

—விக்கிரம சோழன் உலா.

"களவழிக் கவிதை பொய்கை உரை செய்ய, உதியன்
கால்வழித் தளையை வெட்டி அரசு இட்ட பரிசு."

—கலிங்கத்துப்பரணி.

புலவர் அரும்பாடு பட்டார்; அரசனும் அதற்கு இசைந்தான். ஆயினும் அவர் நினைந்தது நிகழவில்லை. நினைக்க

முடியாதது நிகழ்ந்துவிட்டது. அவர் எண்ணத்திற்கு எதிர் மாறுனது நடந்துவிட்டது.

குடவாயில் கோட்டத்துச் சிறையில் கிடந்தான் சேரமான். அவன் அந்நிலையை எதிர்பார்த்தவன் அல்லன். அந்நிலையை, அவன் உள்ளமும் தாங்கிக் கொள்ளாது. வெற்றிப் புகழ் பெற விரும்பி களம் புகுந்த அவன், தோற்றுச் சிறைபட்டமைக்குப் பெரிதும் நாணினுன். வெற்றி வாய்க் காது போயினும், வீரப் புண் பெற்று விண்ணுலகடையும் வாய்ப்பும் கிடைத்திலதே என்று எண்ணி எண்ணி வருந்தினுன். அவ்வுள்ளத் துயர் ஒன்றினுலேயே உயிர்போகும் நிலை பெற்றுவிட்ட அவனுக்கு, அத்துயரை மேலும் மிகு விக்கும் ஒன்று நடைபெற்றுவிட்டது.

ஒரு நாள் நீர் வேட்கை மிகவே, சிறைக் காவலரை விளித்து உண்ணு நீர் தருமாறு வேண்டினுன். சேரமான் சிறந்த பேரரசனே எனினும், அவர் கண்களுக்கு அவனும் ஓர் சிறைக் கைதியாகவே புலப்பட்டான். மேலும் தங்கள் பெரும் படைத்தலைவன் பழையனைக் கொன்றமைக்குப் பழி தீர்த்துக்கொள்ள வேண்டும் என்ற காழ்ப்பு உள்ளமும் அவர் களுக்கு இருந்தது. அதனுல், அவன் வேண்டியதைக் கொடுக்க அவர்கள் விரும்பவில்லை. ஆனுல், அவ்வாறு தாராது போவது, தம் கடமையில் தவறியது ஆகுமே என்பதை உணர்ந்தனர். அதனுல், அவன் கேட்டபோதே தாராது, காலம் தாழ்த்தித் தந்தனர்; தரும்போதும் அரசன் என்ற மதிப்பு இன்றித் தந்து இழிவு படுத்தினர்.

காவலர் கொடுமையைக் கண்டான் கணையன். "நட்டார் பின் சென்று ஒருவன் வாழ்தலின் அந்நிலையே கெட்டான் எனப்படுதல் நன்று" என நினைக்கும் நல்லுள்ளம் உடையான் அவன். அவ்வுள்ளுணர்வு உடையவனே உயர்ந்தோனுவன். தம் நிலையில் தாழும் காலம் வந்துற்ற போதும், தம் மானத்தை இழக்க நினையா மனம் உடை யாரை, மானத்தை இழக்க வேண்டிய இன்றியமையாமை

வந்துறுமாயின் அந்நிலையில், தம் உயிரை இழந்து மானத்தைக் காக்கும் மாண்புடையாரை, இம்மண்திணி ஞாலத்து மக்கள் எல்லாம், அம்மண்ணுலகம் உள்ளளவும், மதித்து மனத்தகத்தே நிறுத்தி வழிபாடு செய்வர்" என்ற இம்மறங் கெடா மானத்தின் மாண்பினை உணர்ந்த மன்னன், கணைக் கால் இரும்பொறை. ஆதலின், சிறை காவலர் செயல் கண்டு அவன் சிந்தை நொந்தான். அவர் தந்த தண்ணீரை உண்ண மறுத்தது அவன் உள்ளம். அந்நீர் நஞ்சினும் கொடிதாகக் காட்சி அளித்தது அவன் கருத்துக்கு. அதனால், உண்ணு நீர்க் கலத்தை ஒருபால் ஒதுக்கி வைத்துவிட்டான். அவன் நீர் வேட்கை எங்கோ சென்று மறைந்துவிட்டது. அவன் நினைவு எதை எதையோ எண்ணத் தொடங்கிவிட்டது.

"போர்க்களம் புகுந்து போரிட்டு, மார்பிலும், முகத்திலும் வீரப்புண் பெற்ற வெற்றி வீரர்க்கே, வானுலக வாழ்வில் இடம் உண்டு. ஆதலின் பிறந்த குழந்தைமுதல் இறக்கும் கிழவர்வரை உள்ள எல்லோரும் வீரப் புண்பெற்று வீறுபெற வேண்டும் என்று விரும்பினார்கள், நாடாளும் நல்லவர். அவர்கள், இறந்து பிறந்த குழந்தைக்கும், உருவின்றிப் பிறந்த ஊன்தடிக்கும் வீரப்புண் பெறும் வாய்ப்பு இல்லாமையால், அவை வானுலக வாழ்வை இழந்து விடுதல் கூடாது என்ற உயர்ந்த உள்ளம் கொண்டு அவற்றை இடுகாட்டில் சென்று சுடுவதன்முன், தருப்பைப்புல்மீது கிடத்தி, வாளால் இருவேறு துண்டுகளாக வெட்டி, வாள்வடு உண்டாக்கி, "பிற வெற்றிவீரர்க்கு உண்டாகும் வாய்ப்பெல்லாம் இவற்றிற்கும் வாய்க்குமாக" என வாழ்த்திச் சுட்டனர். அத்தகைய பெருவேந்தர் வழியில் வந்த நான், போரில் வெற்றி பெறாது போயினும், வீரப் புண்ணாவது பெற்றேனா இல்லை. வீரப்புண் பெற்று விழுமிய நிலைபெறாது போயினும், உயிரிழந்து மானம் இழக்காத மன்னன் என்ற பெயரையாவது நிலைநாட்டினேனா இல்லை. சங்கிலியால் பிணிக்கப்பெற்று இழுத்துச் செல்லப்படும் நாய் போல், பகைவரால் கையில் விலங்கிடப்பெற்று, சுங்குக்

கொண்டுவரப்பட்டு இச்சிறையகத்தே அடைக்கப்பட்டுள்ளேன். இந்நிலை வந்துற்றும் என் உயிர் பிரிந்திலது. உயிரிழந்து போகாமைமட்டும் அன்று; அவ்வுயிரை மேலும் ஓம்ப, உண்ணுநீர் அல்லவோ வேண்டினேன். பாணர்க்கும் புலவர்க்கும் வாரி வாரி வழங்க வேண்டிய நான், அவ்வாறு வழங்கிய என் கைகளால், இச்சிறை காவலரை அல்லவோ இரந்து நின்றேன்; அந்தோ என் இழிநிலை இருந்தவாறு என்னே! என்னினும் இழிந்தாரும் இவ்வுலகில் இருப்பரோ! அத்தகையான் என்றும் பிறந்திருக்கமாட்டான். என் ஒருவனாலேயே இம்மண்ணிற்கு அம்மாசு உண்டாகிவிட்டது; இன்னும் என் உயிர் பிரிந்திலதே" என்றெல்லாம் எண்ணி எண்ணி ஏங்கிற்று அவ்வுள்ளம். அவ்வுள்ள உணர்ச்சிக்கு உருவளித்தது அவன் கை. அக்கருத்தெல்லாம் ஒன்று திரண்டு ஓர் அழகிய பாட்டாக இடம் பெற்றது ஏட்டில். ஏடு அவன் கையில் கிடந்தது. இறந்து வீழ்ந்தது அவன் உடல்.

சேரன் இறந்து வீழ்வதற்கும், செங்கணான் பொய்கையாரோடு சிறைக்கோட்டம் புகுவதற்கும் சரியாக இருந்தது. இருவரும் ஓடோடிச் சென்று, சிறைக் கதவைத் திறந்து கொண்டு உள் நுழைந்தனர். மன்னன் ஒருபால் வீழ்ந்து கிடந்தான். உண்ணுநீர்க்கலம் ஒருபால் உருண்டு கிடந்தது; கையில் ஏடு காட்சி அளித்தது. புலவர் ஏட்டை எடுத்தார். அவர் வாய் பாட்டைப் படித்தது :

> "குழவி இறப்பினும், ஊன்தடி பிறப்பினும்
> 'ஆள் அன்று' என்று வாளின் தப்பார்;
> தொடர்ப்படு ஞமலியின் இடர்ப்படுத்து இரீஇய
> கேளல் கேளிர் வேளாண் சிறுபதம்
> மதுகை இன்றி வயிற்றுத் தீத்தணியத்
> தாம் இரந்து உண்ணும் அளவை
> ஈன்மரோ இவ்வுலகத் தானே?" —புறநானூறு ; 74

மன்னன் மனத்தைப் புலவர் அறிந்துகொண்டார். அவன் மறைவு கண்டு அவர் மனம் மாறாத் துயர் உற்றது என்றாலும்,

அம்மறைவு, மறையா மாண்புமிக்க இச்செய்யுள் பிறப்ப தற்குக் காரணமாயினமை கண்டு களிப்புற்றார். அவன் மானம் இழக்கா மற மாண்பு கண்டு மன்னன் தலை வணங் கினன்.

மன்னன் மனம் மாறியது. போர் போர் என எப்போதும் போர் வெறிகொண்டு வாழ்ந்த செங்கணன் சிந்தை தெளி வடைந்தது. மானமிக்க மன்னன் மறைவிற்குக் காரண மாகிய தன் கொடுமைதீர, அந்நாள் முதல் நல்லற நெறியில் நிற்கத் துணிந்தான். இறைவன் திருக்கோயில் கொண்டிருக் கும் இடம்தோறும் கோயில் அமைக்கும் பணியினை அன்றே தொடங்கினன். இறப்பதற்குள் எழுபது பெருங்கோயில் களைக் கட்டி முடித்தான். அதன் பயனாக, "நல்லான் ஒருவனைக் கொன்ற நயமிலி" என்று நாட்டோரால் பழிக்கத்தக்க அவன், சைவ, வைணவப் பெரியார்களால், தம் அருட்பாடல் களில் வைத்துப் பாராட்டத்தக்க பெருநிலை பெற்றான். அவன் வரலாற்றினை விளங்கப் பாடிய பெரியார்களும், அவன் சிலந்தியாய்ச் சிவத்தொண்டு புரிந்ததும் செங்கணனாய்ச் சிவன் கோயில் கட்டியதும் ஆய, அவன் தொடக்க வரலாற் றினையும், முடிவு வரலாற்றினையும் மட்டும் கூறி, இழிவுடைய அவன் இடைநிலை வரலாற்றினை எடுத்தோதாது மறைந்து விட்டார்கள். இறவாப் பெருநிலை பெற்றுவிட்டான் அவனும்.

